

மே. க. அன்னச்சத்திரம், திருவண்ணுமலை

# நூற்ருண்டு விழா மலர்

15-11-1972

பண்அடுத்த கூடல்
பழம்பதியில், பிட்டமுதை
உண்ணஅடுத்து. வைகை
உடையாமல்—மண்எடுத்துப்
போடுமலை; சந்ததமும்
பொன்னம் பலத்தில்நடம்
ஆடுமலை, அண்ணா மலை.




ஸ்ரீ அண்ணுமலையார்

உண்ணா முலையாள்
ஒருபாகம் ஆனமலை;
கண்ணார் அமுதாய
காட்சிமலை;—விண்ணோர்
துதிக்குமலை; அன்பர்
தொழுதுஏத்தி நாளும்
மதிக்குமலை, அண்ணா மலை.




ஸ்ரீ உண்ணாமுலை அம்மை

உ
சிவமயம்
அண்ணுமலையார் துணை

# வணக்கமும் வாழ்த்தும்

ஆருண்ட சடைமுடியான்; அழல்அண்ணு
மலையுடையான்; அரிய வெள்ளை
ஏருண்ட பெருமிதத்தான்; எழில்உண்ணு
முலைஉமையை இடப்பா கத்தே
கூருண்ட, திருவுடையான், திருத்தலத்தில்
கோட்டையூர் மெஞ, காஞ,
நூருண்டு கண்டஅன்ன சத்திரம்,பல்
நூருண்டு வாழ்க! வாழ்க!!

நாட்டுக்கோட்டை நகரத்தாராகிய தனவணிகப் பெரு மக்களைப் பற்றி, “வண்மையே குலதர்மம் எனக் கொண்டார்” என மகாகவி பாரதியார், காரைக்குடி இந்துமதாபிமான சங்க வாழ்த்துப்பாவில் பாடினுர். கொடையைப் பிறவிக் குணமாகக் கொண்டவர் மகுட தனவணிகர்.

அக்குலத்தில் தோன்றிய கோட்டையூர் மெ. க. குடும்பத் தார், சிவபெருமான் முழுமுதல் பெருமையைக் காட்டுவான் எட்டமுடியாத நெருப்புப் பிழம்பாய் ஓங்கி வளர்ந்த திருவண்ணுமலைத் திருத்தலத்தில், நூறு ஆண்டுகட்கு முன்னர் அன்னச் சத்திரம் ஒன்று கண்டனர்.

அச்சத்திரத்தின் நூற்ருண்டு விழாவை மெ. க. வின் வழித்தோன்றல்கள் இன்று பெருமிதத்தோடு கொண்டாடு கின்றனர். நானும் அதில் மகிழ்ச்சியோடு பங்கு பெறு கின்றேன்.



மெ. க. குடும்பத்தார் இவ் அன்னச்சத்திரத்தோடு, மேலும் அருணைத் தலத்தில் செய்த திருப்பணிகள் பலப்பல. நூற்றாண்டு விழாவை ஒட்டி இன்று வெளியாகும் இம் மலரில் அவற்றின் விபரத்தைத் தந்திருக்கின்றனர்.

ஏனைய நகரத்தார் செய்த அறங்களையும் இம்மலர் எடுத்துக் காட்டுகின்றது. இவற்றுள் கோட்டையூர் திரு பெ. க. அ. சித. வீரப்ப செட்டியார், செய்த நற்பணி பல. அன்பர் வீரப்பசெட்டியார், கோயில் அறங்காவலராக இருந்து, கோயில் வளர்ச்சிக்குச் செய்த தொண்டினைச் சென்ற தலைமுறையினர் நன்கு அறிவர்.

நாட்டுக்கோட்டை நகரத்தாருக்குத் திருவண்ணாமலையில் பல அறநிறுவனங்கள் இருக்கின்றன. ஓயாமடம் என எல்லா நகரத்தாருக்கும் பொதுவான மடம் ஒன்று இருக்கிறது. "ஓயாமடம்" என்றும் "ஓயாமாரிமடம்" எனவும் அதை அழைக்கின்றனர். இரண்டுமே பொருத்தம். ஓயாமடம் என்றால் ஓயாமல் சோறிடும் மடம் என்பது பொருள். ஓயாமாரி மடம் என்பது மழை பொழிவதுபோல வரையரது ஒழிவின்றிச் சோறுபோடும் மடம் எனப் பொருள்படும். அதன் கட்டிடம், நகரவிடுதியில் எங்குமே இல்லாத அளவுக்குப் பெரியதான பெருமிதமான கற்கட்டிடம். அதன் மதிப்பு அந்தநாளிலேயே பதினைந்து இலட்சம் ரூபாய் எனக் கணக்கிட்டிருக்கிறார்கள்.

சாதுக்கள் மடம் என்ற நிறுவனம், காரைக்குடி திரு. சா. நா. சாத்தப்ப செட்டியார் அவர்களால் உண்டாக்கப்பெற்றது. சாதுக்கள் மடம் நல்ல கட்டிடங்களைப் பெற்றுச் சிறப்பாக நடந்து வருகிறது. சாத்தப்ப செட்டியாரின் வழித்தோன்றல்கள், நல்ல முறையில் நடத்தி வருகின்றனர்.

காரைக்குடி திரு. முத்து. அரு. குடும்பத்தாருக்குப் பாடசாலை ஒன்று இருக்கிறது. வேறு பலவற்றையும் இம்மலர் தரும் விபரத்தில்காண்க.

மெ. க. அன்னச் சத்திரம் திருவண்ணுமலையிலேயே சிறப்பான இடத்தில் கீழை இரத வீதியில் அண்ணுமலையார் கோயிலை அடுத்துக் கம்பீரமாகக் காட்சிதரும் பெரிய கட்டிடம். அவர்கள், அண்ணுமலையாருக்குச் செய்தளித்த வெள்ளிவிடை வாகனம் "திண்போர் விடை" என்று திருவாசகம் கூறுமாப் போலே, அண்ணுமலையாரின் பெரிய திருமேனிக்குப் பொருந்த மிகப் பெரியது. அந்த விடையில்.இவர்ந்து, "உண்ணுமுலை உமையாளொடு" அண்ணுமலை அண்ணல் திருவீதி உலவி வந்தருளும் காட்சியை இன்று கண்டுகளிக்க இருக்கின்ரேம்.

மெ. க. குடும்பத்திலுள்ள மிகப்பல அன்பர்கள் எனக்கு நெருங்கிய நண்பர்கள். வரையாது வாரி வழங்கிய வள்ளல் அழகப்பனும் 'ஐயா' என எல்லோரும் அன்புடன் அழைத்த குணக்குன்று இராமனுதனும் இக்குடும்பத்தில்தோன்றியவர் எனப் பெருமை கொள்ளும் உரிமை இக்குடும்பத்தாருக்கு உண்டு.

என்னிடம் பெரும் மதிப்பும் பேரன்பும் கொண்ட, மெ. க. அன்னச் சத்திரத்தார் இம்மலரைத் தொகுக்கும் பணியை எனக்கு இட்டனர்.

எழுபத்தைந்தாவது ஆண்டில் அடிஎடுத்து வைக்கும் எனக்கு, இது கடினமான வேலையே; ஆனுலும் அன்புப் பணியை மறுத்தற்கஞ்சி ஏற்றுக்கொண்டேன். தவிர, அண்ணுமலையாருக்கும் எனக்கும் நெருங்கியதொடர்புஉண்டு.

கோயிலின் சார்பாக வெளியிடப் பெற்ற அருணுசலப் புராணத்தின் பெரிய பணியையும் அண்ணுமலை வெண்பா, சோணசைலமாலை முதலியவற்றை வெளியிடும் பொறுப் பையும் எனக்கே ஈந்து, அண்ணுமலையார் என்னை ஆட்கொண் டாராதலின், அவர்தலச்சத்திரப் பெருமை பேசும் மலரையும் நான் தொகுப்பது சரிதானே.

மலரில் முதல் பகுதி நகரத்தார் செய்த அறங்கள். இரண் டாவது பகுதி தெய்வப் பாடல்கள். மூன்ருவது பகுதி பெரி யோர்கள் வாழ்த்து.

முதற்பகுதிக்கும் மூன்ருவது பகுதிக்கும் நான் பொறுப்பாளன் அல்லன். முதற்பகுதி செய்திகள்; இது சத்திரத்தார் தந்தது.

மூன்ருவது பகுதி வாழ்த்து. இவைகளும் சத்திரத்தார் சேகரித்து அளித்தவை. வைப்புமுறைகள்கூட அவர்களுடையனவே.

இரண்டாவது பகுதி, அருணையைப் பற்றிய தெய்வப் பாடல்கள். இவைகளுக்கு நானே பொறுப்பாளன். அருணையைப் பற்றிய பாடல்கள் ஏராளமாக இருக்கின்றன. எல்லாவற்றையும் போட முடியுமா?

தித்திக்கும் திருவாசகத்தில் அண்ணமலையானைப் பாடிய பாடல் இரண்டு அவ்விரண்டும் இதில்உள. திருஞான சம்பந்தப் பெருமான் தேவாரம் 22, திருநாவுக்கரசு அடிகள் தேவாரம் 30. அவ் 52ம் மலரை அலங்கரிக்கின்றன. பெரிய புராணத்தில் ஆறு பாசுரங்கள், வில்லிப்புத்தூர் ஆழ்வார் பாடல்ஒன்று, குகைநமச்சிவாயர்,குருநமச்சிவாயர் தனிப்பாடல் 4, அண்ணமலை வெண்பா 3, சைவ எல்லப்ப நாவலர் பாடிய அருணசலப் புராணத்தில் 4, சிவப்பிரகாச சுவாமிகள் பாடிய சோணசைலமாலையில் 3, அருணகிரிநாதப் பெருமான் பாடிய திருப்புகழில் 4, வடலூர் வள்ளலார் பாடிய பாடல் 1, ஆக எண்பது தெய்வப்பாடல் இம்மலருக்கு இறை மணம் ஊட்டுகின்றன.

இவ் அருள் பாடல்களை ஓதி, அன்பர்கள் பேறு பெறுவார்களாக! இந்நற்பணிக்கு இச்சிறியேனை ஆளாக்கியஅண்ணமலை அண்ணலுக்கு வணக்கம்.

என்னிடம் உழுவல் அன்பு கொண்ட மெ. க. அன்னச் சத்திரத்தாருக்கு வாழ்த்து.

சத்திரத்திற்குப் பல்லாண்டு! பல்லாண்டு!! பல்லாயிரத்தாண்டு!¡

திருவண்ணமலை
15—11—72

ராய. சொ.







சத்திரத்தின் முன் தோற்றம்.



நாட்டுக்கோட்டை நகரத்தாரின் ஓயா மடம்



சத்திரத்தில் மாணுக்கர் பயில்தல்.



சத்திரத்தில் பயிலும் பிள்ளைகளும், மானேஜரும்

உ

சிவமயம்

அண்ணுமலையார் துணை

# மெ. க. அன்னச் சத்திரம்
# திருவண்ணுமலை
# நூற்ருண்டு விழா மலர்

## 1872 — 1972

நினைக்க முத்திதரும் திருவண்ணுமலைத் தலத்தில் கேரள சிங்கவள நாடாகிய பெரம்பூர் நாட்டில் மாற்றூரான வீரபாண்டிய புரத்தைச் சேர்ந்த கோட்டையூர் மண்ணூருடையார் பிரிவினரான எங்கள் முன்னோர் மெய்யப்ப செட்டியார் மைந்தர் கருப்பன் செட்டியாரின் மக்கள் 1. பொய்சொல்லா மெய்யன் செட்டியார் 2 அழகிய மெய்யன் செட்டியார் 3. வீரன் செட்டியார் ஆகிய மூவராலும் மெ. க. அன்னச் சத்திரம் என்ற பெயரால் திருவண்ணுமலையில் ஆங்கிரச கார்த்திகை கரு 28—11—1872 வியாழக்கிழமை நிறுவப்பெற்ற அன்னச் சத்திரத்திற்கு நூறு ஆண்டுகள் நிறைவுபெறுவதை மகிழ்ச்சியோடு கொண்டாடுகின்ருேம்.

அவர்களின் வழித்தோன்றல்கள் தொடர்ந்து இச் சத்திரத்தை நல்ல முறையில் நடத்தி வந்தனர். இன்றைய தலைமுறையினராகிய நாங்களும் சிறப்பாக நடத்தி வருவதோடு நூற்ருண்டு விழாவைக் காண்பதில் பெருமை அடைகின்ருேம்.

எங்கள் சத்திரத்தைச் சேர்ந்த திருவாளர்கள் 1. அ. க. அ. சித. வெ. வேங்கடாசலம்செட்டியார், 2. அ.க.ராம.மெ.கி. மெய்யப்ப செட்டியார், 3, க. வீ. சொ. அழ. அழகப்ப செட்டியார், 4. அ. க அ. சித. வெ. சிதம்பரம் செட்டியார் ஆகிய நால்வரும் அண்ணுமலையார் கோயில் டிரஸ்டிகளாக இருந்திருக்கின்றனர்.



# திருவண்ணுமலையில்
# மெ. க. குடும்பத்தார் செய்த அறங்கள்

1. கோட்டையூர் திரு. அ. க. குடும்பத்தினர் சொந்தப் பொருளைக் கொண்டும் நகரத்தார்களிடம் நன்கொடை பெற்றும் ஸ்ரீ அருணுசலேசுவர சுவாமி தேவஸ்தானத்தில் சுவாமி கோவில் அம்மன்கோவில் ஆகிய பழய கோவில்களைப் பிரித்துப் புதிய நாகரிகத்துக்குத் தக்கபடி அணி ஒட்டிக்கால் மண்டபங்கள்போட்டு ஆலயத்திற்குள் வலம் வரும்படியாகப் பிரகாரங்கள் வைத்து, திருப்பணி செய்து பரிவாரதேவதைகள் வைக்கும்படியாகக் கட்டிடங்கள் கட்டியுள்ளனர்; விநாயகர் பழநி ஆண்டவர் கோவில்களையும் புதியதாய்க் கட்டியும் தளவரிசை செய்துள்ளனர்; அம்மன் கோவிலையும் பழய கோவிலைவிட அதிகப் பெரியதாயும் வலம் வருதற்குத் தகுந்தாற்போல் அணி ஒட்டிக்கால் மண்டபங்கள் போட்டும், சுவாமி கோவில் அம்மன் கோவில் கொடிமரத்தருகில் பெரிய மண்டபங்கள் போட்டும் பணி செய்தனர். இவற்றின் செலவு ரூ. 12,00,000—0—0

   மேற்படி திருப்பணி விசுவாவசு - வைகாசி 30, (12—6—1905) திங்கட்கிழமை கும்பாபிஷேகம் செய்யப்பெற்றது.

   இரண்டாவது கும்பாபிஷேகம் தாரண - வைகாசி 22, (4—6—1944) ஞாயிற்றுக்கிழமை நடைபெற்றது.

2. கோவிலுக்குள்ளிருக்கும் சிவகங்கைத் தீர்த்தக் குளத்தைக் கோட்டையூர் திரு. க. வீ. அழ. வகையார் பழய குளத்தைப் பிரித்து அகலப்படுத்தியும், ஆழப்படுத்தி வெட்டியும், கருங்கல்லினுல் நாலு பக்கமும் படித்துறைகள் கட்டியும் திருமாளிகைப்பத்தி மண்டபம் நாலுபக்கமும்கட்டியும் விநாயகர் கோவில் மிக அழகாய்க் கட்டியும் வளைகாப்பு

மண்டபத்தைப் புதிதாகக் கட்டியும் இரும்புக் கிராதிகள் போட்டும் நந்தனவனம் வைத்தும் ஷை பிள்ளையாருக்கு நாடோறும் இரண்டுகால பூஜை அபிஷேக நைவேத்தியங்கள் மீ 1-க்கு ரூ. 75 திட்டத்தில் 4 பணிஆட்கள் வைத்து நிரந்தரமாய் நடந்து வரும்படிக்கு ஏற்பாடு செய்துள்ளனர்.
திருப்பணிச் செலவு ரூ. 1,75,000—0—0

3. திரு. க. வீ. அழ. குடும்பத்தார் ஷை விநாயகருக்கு வெள்ளிக் கவசங்கள், வெள்ளிக் குத்துவிளக்கு, பித்தளைத் திருவாசி, பித்தளைப் பீடம், படி முதலிய செய்து வைத்துள்ளனர்.
இவற்றுக்குச் செலவு ரூ. 5000—0—0

4. சுவாமி அம்பாள் பரிவாரங்களுக்குத் தினந்தோறும் (ஆச்சி அம்மாள் மூலமாக) க. வீ. அழ. குடும்பத்தாரால் கற்பூரம் 7 கிளை வெள்ளித் தீபாராதனைத் தட்டில் இரண்டு காலத்திற்கும் தீபாராதனைக்கு ரூபா 25 திட்டத்தில் கொடுத்து நடத்தி வரும் வகையில் மீ 1க்கு ரூ. 25—0—0

## தளவரிசை செய்தது.

5. கோட்டையூர் திரு. அ. க. அ. மெ. வேங்கடாசலம் செட்டியார் வகையினர் சிவகங்கைத் தீர்த்தத்திற்கும் ஆயிரக்கால் மண்டபத்திற்கும் இடையில் கருங்கல் பலகையினால் பெரிய கோபுரம் முதல் வல்லாள மகாராஜா கோபுரம் வரையில் தளவரிசை போட்டுச் செய்த திருப்பணிச் செலவு ரூ. 20000—0—0

6. கோட்டையூர் திரு. அ. க. அ. சித. வெ. நடேசன் செட்டியார் அவர்கள் சத்தி விலாசத்திற்கும், பிரும தீர்த்தத்திற்கும் இடையில் கருங்கல் தளவரிசை போட்டதற்கும் ஆயிரக்கால் மண்டபத்திற்குத் தெற்கில் படி கட்டியதற்கும் பெரிய கோபுரத்திற்குள் கருங்கல் தளவரிசை போட்டதற்கும் திருப்பணிச் செலவு ரூ. 5000—0—0





## துர்க்காம்பாள் கோவில் திருப்பணி

7. கோட்டையூர் திரு. அ. க. குடும்பத்தார் தங்கள் சொந்தப் பொருளைக் கொண்டும் நகரத்தார்களிடம் நன்கொடை பெற்றும் மூலஸ்தானம் முதல் கருப்பக்கிரகம் அந்திருளம் மகா மண்டபம், அலங்கார மண்டபம், நவராத்திரிக் கொலு அலங்கார மண்டபங்களும் கட்டித் திருப்பணி செய்தவகையில் ரூ. 35000 – 0—0

### சங்காபிஷேகம்

8. கார்த்திகைச் சோமவாரத்தில் கோட்டையூர் திரு. அ. க. அ. மெ. வகையார் சங்கு 1008 வாங்கி வைத்தும், வலம்புரிச்சங்கு 1-க்கு ரூ. 500-ல் தங்கக் குவளை கட்டியும், வெள்ளிக் குத்து விளக்கு 2-ம் ஒற்றைமுகக் கற்பூரத் தட்டு 1ம் செய்து வைத்தும் ரூ. 800 செலவு செய்து பல ஆண்டுளாக நடத்திவரும் சங்காபிஷேகத்தை, இப்போது கோட்டையூர் திரு. வெ. சித. அழகப்பசெட்டியார் அவர்கள் பிரதிவருடமும் கார்த்திகை உற்சவத்தில் 3ஆம் திருநாள்அன்று உச்சிக்காலத்தில் 1008சங்காபிஷேகம் செய்ய ஸ்ரீ அருணாசலேசுவரர் தேவஸ்தானத்தில் ரூ. 15000 கொடுத்துக் கட்டளை ஏற்படுத்திச் சங்காபிஷேகம் நடத்தி வருகிறார்கள்.

### காலைசந்தியில் பால் கொழுக்கட்டை நைவேத்தியம்.

9. கோட்டையூர் திரு. அ. க. ராம. மெ. சித. சிதம்பரம் செட்டியார் அவர்கள் ஸ்ரீ சம்பந்த விநாயகருக்குச்சொந்தத்தில் சாமான்கள் விட்டு, பால் கொழுக்கட்டை நைவேத்தியம் செய்து சுவாமிக்கு ஆராதனை செய்து தேசாந்திரிகளுக்கு விநியோகம் செய்து வந்தார்கள். செலவு ரூ. 30—0—0

10. திருவண்ணாமலை ஸ்ரீ அருணாசலேசுவர சுவாமி தேவஸ்தானத்தில் தினந்தோறும் காலையிலும் மாலையிலும் திரு. மெ. க. அன்னச் சத்திரத்திலிருந்து பால் கொடுத்து வருகிறார்கள்.

11. கோட்டையூர். திரு. க. வீ. மு. ப. பசுமடத்திலிருந்து தினந்தோறும் காலையிலும் மாலையிலும் சந்தனம் சேர் 1-ம், பன்னீர் சிறியபாட்டில் 1-ம், விபூதிபடி ½-ம், கற்பூரம் பலம் 5-ம் பால்படி 2-ம் கொடுத்து வந்தார்கள்.

12. கோட்டையூர். திரு. மெ. க. அன்னச் சத்திரம் வகையார் திருவண்ணுமலையில் ரூ. 150000-த்தில் கட்டிடங்கள் கட்டியும் ரூ. 1,50,000-க்குப் பசுங்கரை கிராமம் வாங்கி வைத்தும் வைப்பு நிதி ஏற்படுத்தி, வேத பாடசாலைகள் வைத்து 16 பிள்ளைகளுக்கு இனும் சாப்பாடுபோட்டு இனுமாகச்சொல்லிக் கொடுத்ததுடன், ஷ பிள்ளைகள் தேவஸ்தானத்தில் காலையிலும் மாலையிலும் வேதப்பாராயணம் சொல்லிக்கொண்டு வந்தார்கள். இப்போது போதிய பிள்ளைகள் வராததால் நிறையப் பள்ளிப்பிள்ளைகட்குத் தங்க இடம் கொடுத்து உணவு, உடைகள் வழங்கி, புத்தகங்கள் தந்து சிறப்பாக ஆதரிக்கப்பெறுகிருர்கள்.

13. ஷயார்கள் சுவாமி அபிஷேகத்திற்குப் பிரதி தினமும் காலையிலும் மாலையிலும் நகரத்தார்கள் நிதியிலிருந்து திரு. மெ. க. அன்னச் சத்திரம் மூலமாக (பால் படி 14-ம்) ஒவ்வொரு காலத்திற்கும் அபிஷேகத்திற்கு அனுப்பி வருகிருர்கள். பிரதி தினம் இரண்டு வேளையிலும் உற்சவக் காலங்களிலும் வந்த பிராமணர்களுக்கும், மற்றவர்களுக்கும் அன்னதானம் போட்டும் ரூ. 15,000-ம் செலவு செய்து 100 வருடங்களாக நடத்தி வருகிருர்கள்.

14. திரு. அ. க. அ. மெ. குடும்பத்தார் கார்த்திகை 5-வது உற்சவத்திற்கு ரூ. 35000-த்தில் வெள்ளி ரிஷப வாகனம் சொந்தத்தில் செய்து ஷ வாகனம் வைப்பதற்கு ரூ. 7500-ல் கட்டிடங்கள் கட்டியும் ஷ வரகனத்துடன் வரும் எலக்ட்ரிக் இஞ்சின் ரூ. 2000த்தில் வாங்கியும் எலக்ட்ரிக் விளக்குகளும்

கியாஸ் லைட்டுகளும் எண்ணெய்த் தீவட்டிகளும் வாண வேடிக்கைகளும் ரூ. 400 செலவிட்டு உற்சவத்தைச் சிறப்பாய் நடத்துகிறார்கள். ஷையார்கள் ரூ. 90,000- செலவு செய்து எலக்ட்ரிக் இஞ்சின் 2. நித்தியப்படி உபயோகத்திற்கும் உற்சவ காலங்களுக்கும் உபயோகப்படுத்தி வரும்படி இஞ்சின் ஏற்பாடு செய்தும் ஷைக்குக் கட்டிடம்கட்டியும் மீ 1-க்கு ரூ. 600 வீதம் எலக்ட்ரிக் தீபமும் சுவாமி அம்பாள் திருவாசி எண்ணெய்த் தீபங்களும் சுற்றுக் கோவிலுக்குச் சில்லறை எண்ணெய்த் தீபங்களும் கொடுத்து நடத்தி வந்தார்கள்.

15. கோட்டையூர். திரு. அ. க. ராம. மெ. சித. சிதம்பரம் செட்டியார் அவர்கள் மூலஸ்தானம் சுவாமிக்கு அளித்த விபூதிப்பட்டம் 1–ல் சீமைக்கமலம் 1–க்கு ரூ. 2550. பலசவயிரம் 74-க்கு ரூ. 4318. தங்கம் ரூ. 587. கூலி ரூ. 200. ஆக மொத்த வராகனிடை 86–க்கு ரூ. 7655—0—0

16. ஷையூர் திரு. அ. க. அ. மெ. வேங்கடாசலம் செட்டியார் அவர்கள் வகையார் மூலஸ்தானம் சுவாமிக்கு அளித்த தங்க நாகாபரணம் 1-க்குக் கீழ்ச்சுருள் 1. மேல்படம் 1 ஆக உருப்படி 2-க்கு வராகனிடை 3080-க்கு ரூ. 25000—0—0

17. ஷையூர் திரு. அ. க. அ. மெ. வகையாருக்காக மெய்யப்ப செட்டியார் அவர்கள் முயற்சியின் பேரில் கோயில் முழுவதற்கும் எலக்ட்ரிக் தீபம்போட இஞ்சின் 2. ஷை கட்டிடம் உள்பட ரூ. 90000—0—0

18. ஷை அ. க. அ. மெ. குடும்பத்தார் அளித்த வெள்ளி ரிஷபம் சகடை உள்பட மதிப்பு ரூ. 35000—0—0

19. ஷை கட்டிடம் ரூ. 7500—0—0

20. திரு. அ. க. ராம. அரு. அருணசலம் செட்டியார் அவர்கள் வழங்கிய பிரதோஷ வெள்ளிச் சின்ன ரிஷபம் 1-க்கு மதிப்பு ரூ. 3000—0—0

21. ஷியூர் திரு. க. வீ. அழ. இராமனுதன் செட்டியார் அவர்கள் மூலஸ்தான சுவாமிக்கு அளித்த வெள்ளிக் குத்துவிளக்கு 2-க்கு எடை 3458-8-0-க்கு ரூ. 3458—8—0

22. ஷியார் அவர்கள் அம்மன் மூலஸ்தானத்திற்குக் கொடுத்த வெள்ளிக் குத்துவிளக்கு எடை ரூ. 2010-க்கு ரூ. 2010—0—0

23. கோட்டையூர். திரு. ராம. அழ. சிதம்பரம் செட்டியார் அவர்கள் மூலஸ்தானம் சுவாமிக்குச் சாத்துப்படி செய்துவந்த வெள்ளி நாகாபரணம் ரூபா எடை 1800-க்கு மதிப்பு ரூ. 1350-க்குச் சேதாரம் ரூ 50 போக ரூ. 1300—0—0

24. கோட்டையூர் திரு. அ. க. அ. சித. வெ. நடேசன் செட்டியார் சோமவாரச் சங்கு அபிஷேகத்திற்காகச் செய்து வைத்த வெள்ளிக் குத்துவிளக்கு 2-க்கும் ஒற்றைக் கற்பூரத் தட்டுக்கும் கூலி உள்பட விலை மதிப்பு ரூ. 500—0—0

25. கோட்டையூர். திரு. அ. க. அ. சிதம்பரம் செட்டியார் அவர்கள் சுவாமிக்குப் பொன்முடி 1-ம் பொன் முப்பட்டை 1ம்- பொட்டு உள்பட காசிக் கமலம் 1-ம் தங்கம் ஆறு பட்டைப் பூணூல் உள்பட வராகனிடை 414½-க்கு ரூ. 2745—0—0

26. ஷியார் அளித்த தங்கக் குவளை கட்டிய வலம்புரிச்சங்கு 1-க்கு ரூ. 750—0—0

27. ஷியார் வழங்கிய காண்டாமிருகக் கொம்பு 1-க்கு மதிப்பு ரூ. 100—0—0

28. கோட்டையூர் திரு. வெ. சித. அழகப்ப செட்டியார் அவர்கள் ஸ்ரீ சோமாஸ்கந்தருக்கு வெள்ளிக்கவசம் சுமார் 8½ கிலோவில் செய்து வைத்திருக்கிறார்கள்.

29. திரு. அ. க. அ. சித. அழ. சிதம்பரம் செட்டியார் அவர்கள் மாறலில் அண்ணாமலையாரின் ஆவுடையாருக்கு ரூ. 5,000 செலவில் வெள்ளிக்கவசம் செய்து வைக்கப்பெற்றது.





அண்ணமலையாரின் ஐந்தாந் திருவிழா ரிஷப வாகனக் காட்சி
(அன்னச்சத்திரத்தின் மண்டபப்படி)



சிவகங்கைத் திருக்குளமும் மலைத்தோற்றமும்.



19 — 5 — 1967-இல் அணி அண்ணாமலைக் குட நீராட்டு



சத்திரத்தில் உள்ள அண்ணுமலையார் திருவுருவப்படம்

## திருவண்ணுமலைத் தேவஸ்தானத்தைச் சேர்ந்த
## ஆதி அருணுசலம் என்கிற

# அணி அண்ணுமலைத் திருப்பணி

1. கோட்டையூர் திரு. அ. க. அ. மெ. வகையார்களும் திரு. ராம. பெ. அவர்களும் சேர்ந்து பழய கோவிலை முழுதும் பிரித்துப் புதியதாக நல்லவிதமாக, சுவாமி அம்மன்கோவில் உள்பட கருப்பக்கிரகம் அந்திருளம் மகாமண்டபம் முதலியவைகளும் கட்டி, பரிவாரங்களுக்கும் கட்டிடம் கட்டி, சுவாமி அம்பாளையும் வலம் செய்யும்படியாக உள் பிரகாரத்தில் மண்டபம் முழுதும் கட்டி, கோபுரமும் கட்டி,, திருமதிலும் கட்டி, அக்கிரகாரம் விடுதி கட்டி, திருப்பணி செய்த வகையில் ரூ. ?,50,000—0—0

   மேற்படி கும்பாபிஷேகம் பிங்கள தை. கா. ஞாயிற்றுக்கிழமை 27—1—1918இல் நடைபெற்றது.

2. மறுபடி திரு. அ. க. அ. சித. அழ. சிதம்பரம் செட்டியார் அவர்களால் ரூபாய் நாற்பதாயிரம் செலவிட்டுக் கோயிலைப் பழுது பார்த்து, வன்னம் வைத்து, பிலவங்க வைகாசி ரு. 19—5—1967 வெள்ளிக்கிழமை கும்பாபிஷேகம் செய்யப்பெற்றது.

3. திரு. அ. க. அ. மெ. வகையார் அணி அண்ணுமலை சுவாமி அம்பாளுக்கு நாகாபரணமும் வெள்ளிக் கவசங்களும் பரிவாரங்களுக்கு வெள்ளிக் கவசங்களும் செய்து வைத்திருப்பதற்கு ரூ. 5,000—0—0

4. திரு. அ. க. அ. மெ. வகையார் ஷை கோவிலுக்கு இரண்டு கால பூஜைக்குக் கட்டளை வைத்து அபிஷேகம் நைவேத்தியம் வகைகளும், சிப்பந்திகளுக்கு, பிரசாதப் பட்டுவாடா க்களும் செய்து வருவதுடன், நந்தனவனமும் வைத்துப் பூஜைக்கு

மலர் கொடுத்து வரும்படி ஏற்பாடு செய்து வேலைக்காரர் களுக்குச் சம்பளமும் கொடுத்து நடத்திவருவதற்கு மீ 1-க்குச் செலவு ரூ. 200—0—0

5. ஷை அறங்கள் நிரந்தரமாய் நடந்து வரும் பொருட்டு ரூ. 50,000-க்கு அணி அண்ணுமலையில் நிலம் வாங்கிவைத்தும் அபிஷேகத்திற்குக் காலம் 1-க்கு 2 படி பால் கொடுத்தும் நடத்தி வருகிறார்கள்.

6. அணி அண்ணுமலையில் திருப்பணிக்கு விடுதி கட்டியும் 10-வீடு அக்கிரகாரம் கட்டியும் வேலைக்காரர்களுக்குக் குடியிருக்க வீடுகட்டியும் செலவு செய்த வகையில் ரூ. 10000—0—0



# திருவண்ணுமலையில்

# ஏனைய நகரத்தார் செய்த அறங்கள்

1. ராஜா மண்டபம் என்கிற கலியாண மண்டபம், இராமச்சந்திர புரம். திரு. தீ. சொ. நா. தீ. அ. வகையார் மிக அழகாக மர வேலைகள் செய்தும், கருங்கல் தூண்களெல்லாம் சலவைக் கல் மாதிரி பளபளப்பு வேலைகள் செய்தும், தாம்பரத் தகட்டினுல் கொட்டகை போட்டும், லஸ்தர் குளோப்பர்களினுல் அலங்கரித்தும், 4 மர பீரோவுக்குள் பெரிய கண்ணுடிகள் வைத்தும், வர்ண வேலைகள் மிகவும் அழகாய்ச் செய்தும் ஷை மண்டபத் திருப்பணிசெய்ய ரூ. 50000—0—0

2. கோவிலுக்குள்ளிருக்கும் பிருமதீர்த்தக் குளத்தைக் கானுடுகாத்தான். திரு. வெ. சா. குடும்பத்தார். ஷை பழைய குளத்தைப் பிரித்து அகலப்படுத்தியும் ஆழப்படுத்தியும் உள்ளிருந்த கருங்கல் பாறையை ஜம்பர் போட்டு உடைத்தெறிந்தும் அழகாய் நாலு பக்கமும் கருங்கல்லினுல் படிகள் கட்டியும் திருப்பணி செய்ய ரூ, 75000—0—0

3. கோட்டையூர் திரு ராம. பெ. நாராயணன் செட்டியார் அவர்கள் பெரிய கோபுரத்திற்கு வெளியில் 16-கால் மண்டபத்தைச் சேர்ந்தாற்போல் கீழ்புறம் உற்சவகாலங்களில் வாகனங்களில் சுவாமியை எழச்செய்து கச்சு சாத்தும் மண்டபம், கருங்கல் தூண் நிறுத்தி இரு பக்கங்களில் பாவுக்கல்லினுல் மண்டபம் போட்டும், கல்யாணக்கொட்டகை மாதிரி மரத்தினுல் மிக அழகாய்ச் சித்திர வேலைகள் செய்தும் தாம்பரத் தகட்டினுல் கொட்டகைபோட்டுச் செய்திருக்கும் திருப்பணிச் செலவு ரூ. 35000—0—0

4. காரைக்குடி திரு. ஆ. வி. ப. முரு. முருகப்ப செட்டியார் அவர்கள் சுவாமி சந்நிதி அக்கிரகாரத்தில் ரூ. 20000 செலவு செய்து கட்டிடம் கட்டியும், கார்த்திகைப் பிருமோற்சவ காலத்தில் பரதேசிகளுக்கும் ஏழைகளுக்கும் சாப்பாடு போட்டும், தேர்முட்டித் தெருவில் தண்ணீர்ப்பந்தல் வைப்பதற்கு ரூ 5000த்தில் கட்டிடம் கட்டியும், வேலைக்காரர்கள் குடியிருக்க ரூ 5000த்தில் வீடு வாங்கியும் மீ 1-க்கு ரூ. 120 செலவுசெய்து ஏழைகளுக்குக் நீர்மோரும் கம்பங்கஞ்சியும் நல்ல தண்ணீரும் வருஷம் முழுதும் கொடுத்து 6-வருஷ காலமாய் நடத்திவந்தார்கள்.

5. நகரத்தார் ஒயா மடம் திருவூடல் தெருவில் இடம்வாங்கி ரூ. 1500000. பதினைந்து லட்சம் ரூபாய் செலவு செய்து கல் மண்டபம் கட்டி, கார்த்திகைப் பெருவிழாக்களிலும் சாதாரண மான நாட்களிலும் வருகிற நகரத்தார்களிடம் மகமை வசூல் செய்து, வைப்பு நிதி ஏற்படுத்தி, இருக்கிற நிதியிலிருந்து தொகைகள் எடுத்தும் கார்த்திகைப் பெருவிழாவில் 7-வது திருநாள் முதல் பூஜை ஆரம்பித்து 11-வது திருநாள் வரையில் நாள் 5-க்கு பூஜை நடத்தியும் நாள் 1-க்குச் சுமார் 6000 மக்களுக்கு மேல் 7000 மக்கள் வரையில் வந்தவர் களுக்கு இல்லையென்று சொல்லாமல் அன்னதானம் நடத்தி வருகிறார்கள். ஷை பூஜையும் ஷை மடமும் ஏற்படுத்தி 200-வருஷ காலமாய் நடந்து வருகிறது. ஷை பூஜைக்கும் வருஷம் 1-க்கு ரூ. 6000 வரையில் செலவுஆகிறது.

6. ஷை தர்மத்தில் ஷை மடத்திலிருந்து கார்த்திகை விழாவில் பெரிய கோபுர தீபத்திற்காக ரூ. 35-ம் கிரி நெய் தீபத்திற்காக ரூ. 50-ம் பிரார்த்தனைக் காணிக்கைக்காக ரூ. 50-ம் தேவஸ் தானத்தில் தவறாமல் செலுத்தி நடத்தி வருகிறார்கள்.

## 2-ஆவது திருநாள் மண்டபப்படி.

7. கோட்டையூர் திரு. ராவ்பஹதூர் பெ. க. அ. சித. வீரப்ப செட்டியார் M. B. E. அவர்கள் ஷியார்கள் தம்பி அ. சி. அ. வீரப்ப செட்டியார் அவர்கள் ரூ. 35000-த்தில் சுவாமிக்கு வெள்ளி இந்திரவிமானம் செய்தும் ஷியார் தமக்கை திருமதி வள்ளியம்மை ஆச்சி அவர்கள் ரூ. 15000-த்தில் அம்மனுக்கு வெள்ளிச் சின்ன இந்திர விமானம் செய்தும் ஷி விமானங்கள் வைப்பதற்கு ரூ. 7000-த்தில் கட்டிடம் கட்டியும் ஷி விழாவை ஷி விமானங்களில் செய்வித்தும் கியாஸ் லைட்டுகளும் எண்ணெய்த் தீவட்டிகளும் வாண வேடிக்கைகளும் இரண்டு வருஷத்திற்கு முன் ரூ. 500-ல் செலவு செய்து நடத்தி வந்ததை இப்போது இரண்டு வருஷ காலமாய் ரூ. 250-ல் செலவிட்டு உற்சவத்தை நடத்தி வந்தார்கள்.

## 4-ஆவது திருநாள் மண்டபப்படி.

8. காரைக்குடி திரு. முத்து. அரு. வகையார் திருவண்ணாமலையில் ரூ. 75000-த்தில் இரண்டு கட்டிடங்கள்கட்டி வேதம், சாஸ்திரம் இரண்டு பாடசாலைகள் வைத்து 30-பிள்ளைகளுக்கு இனம் சாப்பாடுபோட்டு இனமாகச் சொல்லிக் கொடுக்கிறார்கள் ஷி பிள்ளைகள் தேவஸ்தானத்தில் காலையிலும் மாலையிலும் வேதப்பாராயணம் சொல்லிக்கொண்டு வருகிறார்கள்.

## 8-ஆவது திருநாள் மண்டபப்படி

9. காரைக்குடி திரு. சா. நா. சாத்தப்ப செட்டியார் குடும்பத்தார் சாதுக்கள் மடத்திலிருந்து 8-வது திருநாள் பிட்சாண்டவருக்கு அபிஷேக ஆராதனை அலங்காரம்செய்து, தங்க ரேக்குப் போட்ட கிரி வாகனத்தில் நடத்திவருகிறார்கள்.

10. ஷை யார்கள் காலேயிலும் மாலேயிலும் பால் 3-படி அபிஷேகத்திற்கு அனுப்பிக்கொண்டு வருகிருர்கள்.

11. ஷை யார்கள் ரூ. 100000-த்தில் கட்டிடங்கள் 2-கட்டியும் சாதுக்களுக்கும் ஏழை மக்களுக்கும் வந்தவர்களுக்கும் இல்லேயென்று சொல்லாமல் அன்னதானம் அளித்தும் 63--நாயன்மார்கள் குருபூஜை அந்தந்த நட்சத்திரங்களில் நடத்தியும் மார்கழி ஆருத்திரா தரிசனத்தில் கூத்தப்பெருமானுக்கு ரூ. 500 வரை செலவு செய்து அபிஷேக அலங்காரம் செய்து விழா நடத்தியும் வருகிருர்கள். ஷை சாதுக்கள் மடத்திற்காக ஆடையூர் கிராமத்தில் ரூ. 100000-த்துக்கு நிலம் வாங்கியும் வைப்புநிதி வைத்தும் ரூ 10000-ம் வருஷம் 1-க்குச் செலவு செய்தும் நிரந்தரமாய்ப் பல காலமாய் நடத்தி வருகிருர்கள்.

## 9-ஆவது திருநாள் மண்டபப்படி.

12 காளுடுகாத்தான் திரு வெ. சா. வகையார் காலேசந்தியில் மீ 1-க்கு ரூ. 200 செலவுசெய்து கட்டளே நடத்தியும், ரூ 75000-ம் செலவுசெய்து பிருமதீர்த்தக் குளம் திருப்பணி செய்தும், அம்பாளுக்கு மகாரதம் என்கிற தேரை ரூ. 20000-த்தில் செய்து வைத்தும், மூலஸ்தானம் அம்பாளுக்கு ரூ. 7500-ல் தங்கக் கவசம் செய்து வைத்தும், உற்சவத் தனி அம்பாளுக்கு ரத்தினக் கிரீடம் ரூ. 30000-த்தில் செய்து வைத்தும் கார்த்திகைப் பிரும உற்சவத்தில் ரூ. 700 வரையில் செலவு செய்து அபிஷேகம் அலங்காரம் கியாஸ் லேட்டுகளும் எண்ணெய்த் தீவட்டிகளும் வாண வேடிக்கைகளும் ஏற்பாடு செய்து நடத்தி வருகிருர்கள்.

13. காரைக்குடி. திரு சா. மெ. அரு. அருணுசலம் செட்டியார் அவர்கள் மார்கழி மாதத்தில் மாணிக்கவாசகர் விழா நடத்தியும், நடராசாவுக்கு ஆருத்திரா தரிசனத்திற்கு





அபிஷேகம் செய்தும், அறைக்கட்டு உற்சவமும் வீதி உற்சவமும் ரூ. 500 வரையில் செலவு செய்து நடத்தி வருகிறார்கள்.

14. பள்ளத்தூர் திரு. சு. சித. சிதம்பரம் செட்டியார் வகையார் ரூ. 2600 தேவஸ்தானத்தில் நிதி கொடுத்து வருஷம் 1-க்கு ரூ. 150 திட்டத்தில் மாதம் தோறும் எல்லா சுக்கிர வாரங்களிலும் அபிஷேக அலங்காரம் ஸ்ரீ பராசக்தி அம்பாளுக்குச் செய்து நைவேத்தியம் தீபாராதனை சுண்டல் விநியோகம் ஊஞ்சல் உற்சவம் நடத்தி வருகிறார்கள்.

15. தர்மகர்த்தாவாக இருந்த திரு. தீ. சொ. முருகப்ப செட்டியார் அவர்கள் முயற்சியினால் புதுக்கோட்டைச் சிங்கமுத்துப்பிள்ளை இடம் ரூ. 1500 தேவஸ்தானத்தில் நிதிபெற்று வருஷம் 1-க்கு ரூ. 120 திட்டத்தில் மாதா மாதம் எல்லாச்சோமவாரங்களிலும் அபிஷேக அலங்கார தீபாராதனை உள்பட உற்சவம் நடத்திவருகிறார்கள்.

16. கார்த்திகைப் பெருவிழா, மார்கழி விழா ஆனித் திருவிழா, ஆடி விழா, நவராத்திரி விழாக்களில் காரைக்குடி திரு. சா. நா. வகையார் ஒவ்வொரு விழாவிற்கும் 10 பேர் வேதபாராயணம் வைத்து அதிக விமரிசையுடன் சாப்பாடு செய்துவைத்து தட்சணையும் கொடுத்து ஒவ்வொரு விழாவிற்கும் ரூ 250 செலவு செய்து நடத்தி வருகிறார்கள்.

17. கொத்தமங்கலம் திரு. ராம. அரு. வெ. பெத்தாச்சி செட்டியார் அவர்கள் கொடுத்த 7-வில்லையுள்ள வைர நெற்றிப் பட்டம் 1 இல் மொத்தம் வைரம் 296, சிகப்பு 110, பச்சை-7 தொங்கட்டம் 3-வரிசையுள்ள விபூதிப்பட்டையில் வயிரம் 36, தொங்கட்டம் 26-க்கு வயிரம் 26. தங்கம் கூலி உள்பட ஷை வயிர நெற்றிப்பட்டம் 1-க்கு மதிப்பு ரூ. 12000—0—0

18. ஷை யார் அம்மனுக்குச் செய்த 7-வில்லையுள்ள வைர நெற்றிப்பட்டம் 1இல் மொத்தம் வைரம் 220-க்கு ரூ. 7000. 6-பச்சைக்கு ரூ. 300-ம் சிகப்பு 1-க்கு ரூ. 150-ம் தங்கம் கூலி ரூ. 600. தொங்கட்டம் வயிரப் பொட்டு 1இல் வயிரம் 12. நடுநாயகப் பச்சை 1, ஆக மதிப்பு ரூ. 8550..0—0

19. ஷையார் வழங்கிய வயிரப் புலாக்கு 1இல் வயிரம் 3-தொங்கட்டத்தில் சன்ன வயிரம் 3-சின்ன வயிரம் I. ஆக 7 வயிரம் உள்ள புலாக்கு 1-க்கு வராகனிடை 0-13-6க்கு ரூ. 1200—0—0

20. கானாடுகாத்தான். திரு. சா. அ. அண்ணாமலை செட்டியார் அவர்கள் மூலஸ்தானம் அம்பாளுக்குச் செய்து வைத்த தங்கக் கவசம் பொன்கிரீடத்தில் பதித்திருக்கும் சீமைக்கமலம் 1. உள்பட வராகனிடை 215-4-0 கர்னப்பத்திரம் ஜதை 1-க்கு 35-0-0 மார்புக்கவசம் 1-க்கு வராகனிடை 299-0-0 அரைக் கவசம் 1-க்கு வராகனிடை 266-8-0 அஸ்தம் ஜதை 1-க்கு வராகனிடை 191-12-0 பாதம் ஜதை 1-க்கு வராகனிடை 147-0-0 ஆக உருப்படி 9-க்கு வராகனிடை 1154-8-0 க்கு ரூ. 7648—10—0

21. ஷையூர் திரு வெ: வீர. வெ. அரு. நாகப்பசெட்டியார் வகையார் உற்சவத் தனி அம்மனுக்குச் செய்த கல்லிழைத்த ரத்தினக் கிரீடம் 1இல் கெம்புக்கல் 2420. உலாந்தாக் கமலம்116. பெரிய பச்சை 4. சின்னப் பச்சை 1. பலிசவயிரம் பொன் வராகனிடை 250. இடி தங்கம் வராகனிடை 150. ஆக மொத்தம் வராகனிடை. 400-க்கு ரூ. 30000—0—0

22. ஷையூர் திரு. திவான்பஹதூர். சா. ராம. மு. ராம. இராமசாமி செட்டியார் அவர்கள் செய்துவைத்த அம்மன் தேர், தகடு உள்பட ரூ. 20000—0—0





23. ராவ்பகதூர். பெ. க. அ. சித. வீரப்ப செட்டியார் M. B. E. அவர்கள் தொகை கொடுத்தும் நகரத்தார்கள் உதவியாலும் செய்துவைத்த சுவாமி மரத்தேர், தகடு உள்பட மதிப்பு
ரூ. 55000—0—0

24. ஆரிமளம். திரு செ. சித. முத்து. செல்லப்ப செட்டியார் அவர்கள் சோமாஸ்கந்தருக்குச் செய்தளித்த வயிரம்கெம்பு பச்சை வைத்து இழைத்த கிரீடம் 1-க்கு மதிப்பு
ரூ. 44000—0—0

25. கொத்தமங்கலம். திரு. சி. அ. சி ராம. இராமன்செட்டியார் அவர்கள் உற்சவ விநாயகருக்குச் செய்த சொர்ணக் கவசம் உருப்படி11-க்குத் தங்கம்வராகனிடை 848-க்கு ரூ. 7000—0—0

26. ஷையூர் சி. அ. சி. அரு. அவர்கள் மனைவி வள்ளியம்மை ஆச்சி அவர்கள் பரிவார தெட்சணாமூர்த்திக்குச் செய்த வெள்ளிக் கவசங்கள் உருப்படி 8-க்கு எடை 285-க்கு ரூ 285—0—0

27. ஸ்ரீ வேணுகோபால சுவாமி 1. ஷை அம்மன் 2. ஆஞ்சனேயர் 1. கருடன் 1. இவைகளுக்குச் செய்த கவசங்கள் உருப்படி 12-க்கு எடை 1680-க்கு வெள்ளி கூலி உள்பட
ரூ. 1680—0—0

28. ஸ்ரீ கஜலட்சுமிக்குச் செய்த வெள்ளிக் கவசம் உருப்படி 10-க்கு எடை 705-க்குக் கூலி உள்பட ரூ. 705—0—0

29. ஸ்ரீ ஆறுமுக சுப்பிரமண்ணிய சுவாமி 1. ஷை அம்மன் 2. இவைகளுக்குச் செய்த வெள்ளிக் கவசம் உருப்படி 27-க்கு எடை 1842-க்குக் கூலி உள்பட ரூ. 1842—0—0

30 ஸ்ரீ சண்டீசுவரருக்குச் செய்த வெள்ளிக் கவசம் உருப்படி 8-க்கு எடை 255-க்குக் கூலி உள்பட ரூ. 255—0—0





31. வைரவருக்குச் செய்த வெள்ளிக் கவசங்கள் உருப்படி 14–க்கு எடை 608–க்குக் கூலி உள்பட ரூ. 608—0—0

32. சனீசுவரருக்குச் செய்த வெள்ளிக் கவசம் 1–க்கு எடை 135–க்குக்கூலி உள்பட ரூ. 135—0—0

33. வள்ளியம்மை ஆச்சி அவர்களால் ஸ்ரீ வேணுகோபால சுவாமி சுப்பிரமணிய சுவாமி இரண்டிற்கும் செய்துவைக்கப் பெற்ற வெள்ளித்திருவாசி ரூ. 2700—0—0

34. வேத சாத்திர பாடசாலை உரிமையாளர் காரைக்குடி. திரு. முத்து. அரு. சாமிநாதன் செட்டியார் வகையார் செய்து வைத்த வெள்ளிக் காமதேனு வாகனம் சகடை உள்பட ரூ. 30000—0—0

35. வெள்ளிக் கற்பக விருட்சம் வாகனம் சகடை உள்பட ரூ. 30000—0—0

36. ஷெட்டுக் கட்டிடம் ரூ. 10000—0—0

37. பள்ளத்தூர். திரு. ந. பெ. பெத்தபெருமாள் செட்டியார் அவர்கள் அம்மனுக்குச் செய்த தங்கக் கிளி 1–க்கு ரூ. 150—0—0

38. தேவகோட்டை. திரு. எ. பெரி. கரு. சித. சிதம்பரம் செட்டியார் அவர்கள் குமாரர், கம்பத்திளையனர் என்கிற சுப்பிரமணிய சுவாமிக்குத் தங்கக் கவசம் பவுன் 230–க்கு வெள்ளித் திருவாசி வெள்ளிப் பீடம் தங்கவேல் ஆக உருப்படி 4–க்குக் கூலி உள்பட ரூ. 5000—0—0

39. ஷெயூர். திரு. நா. க. அ. நா. பழநியப்ப செட்டியார் வழங்கிய பொன் சலங்கைமாலையில் முகப்பு உள்படச் சலங்கை 44. மாங்காய் 2. பாதாம்காய் 2. மணி 2. அருசிக்காய் 2. சுரைக்

காய் 1. அரிநெல்லிக்காய்க் குண்டு 112. தங்கம் கூலிஉள்பட, பொன் சலங்கை மாலை 1-க்கு வராகனிடை 67-க்கு
ரூ. 500-0-0

40. ஷியார் அளித்த தங்கச் சங்கிலியில் கோத்த வயிர டாலரில் வயிரம் 51. சிகப்பு 9. நடுநாயகம் நீலம் 1.தொங்கட்டம் 1-ல் நடுநாயகம் பச்சை I. வயிரம் 16. ஆகக் கோவை 1-க்கு
ரூ. 1000—0—0

41. ஷியார் தந்த பொன்சங்கிலியில் கோத்த வைர டாலர் 1.க்கு மதிப்பு ரூ. 1000—0—0

42. ஷியார் கொடுத்த வயிர நத்து 1-ல் வயிரம் 30 வைத்து இழைத்த உருப்படி 1-க்கு ரூ. 500—0—0

43. ஷியார் வழங்கிய இரட்டைப்பட்டைப் பொன் கெடியாரச் சங்கிலியில் கோத்த கெம்புப் பதக்கம் 1-ல் கெம்பு 80. பச்சை 6. புஷ்பராகம் 10. வைத்து இழைத்த கொடிப்பதக்கம் முத்துக் கட்டியது உருப்படி 1-க்குத்தங்கம் கூலி உள்பட ரூ. 300—0—0

44. ஷியார் குமாரர் திரு கண்ணப்ப செட்டியார் அவர்கள் அளித்த ஒற்றைப்பட்டைச் சங்கிலியில் கோத்த கெம்புக் கொடிப்பதக்கம் 1-ல் கெம்பு 79. பச்சை5 புஷ்பராகம்7.வைத்து இழைத்த பதக்கம் 1-க்குத் தங்கம் கூலி உள்பட
ரூ. 350—0-0

45. திரு. நா. க. அ. பழ. அவர்கள் மூலஸ்தானம் அம்மனுக்கு அளித்த உருப்படி 11-க்கு விபரம்.

| | |
|---|---|
| மார்புக்கவசம் 1-க்கு எடை | 93½ |
| அரைக்கவசம் 1க்கு எடை | 106 |
| அஸ்தம்-2க்கு எடை | 65½ |

கர்னப்பத்திரம் 2-க்கு எடை 14
கிரீடம் 1-க்கு எடை 59½
பாதம் 2-க்கு எடை 33
வெள்ளிப்பீடம் 1-க்கு எடை 456
பத்மம் 1-க்கு எடை 110

ஆகமொத்தம் வெள்ளி எடை 937½-க்கு

ரூ. 1000—0—0

46. திவான்பகதூர். திரு. தீ. நா. முத்தய்யா செட்டியார் அவர்கள் பிரதோஷ நாயகருக்கு அளித்த கவசம் வெள்ளிக்கிரீடம் 1, மார்பு 1. புயம் 2. அஸ்தம் 4 இரட்டைப் பாதம் 1. ஆக உருப்படி 10 க்கு வெள்ளி எடை 129½க்கு ரூ. 129-8-0

47. ஷையார் கொடுத்த ஷை அம்மன் கிரீடம் 1/ மார்புக்கவசம் 1. உடைதாரம் 1. அஸ்தம் 2. புஜம் 1. கர்னப்பத்திரம் 2. இரட்டைப் பாதம் 1. ஆக உருப்படி 9-க்கு வெள்ளி எடை 81க்கு ரூ. 81—0—0

48. ஷையார் தந்த ஷை சுவாமி அம்மனுக்கு முன்பக்கம் வெள்ளி போட்ட பிரபை 1-க்கு எடை 346⅜ ரூ. 346—6—0

49. ராஜாமண்டபம் என்கிற கல்யாண மண்டபத்தில் பிரும உற்சவங்களில் நகைகளைப் பாதுகாப்பாய் வைத்துக் கொள்வதற்காக ஷையார் வாங்கிக் கொடுத்த 6-அடி இரும்புப் பெட்டி 1 பீரோ 1. இவற்றிற்கு விலை ரூ. 900—0—0

50. நச்சாந்துப்பட்டி திரு. வீ. மு. வீரப்ப செட்டியார் அவர்கள் அளித்த மூக்குத் திருகாணியில் வயிரம் 1 வைத்திழைத்தது மதிப்பு ரூ. 250—0—0

51. திரு. தீ. சொ. அவர்கள் செய்து அளித்த வெள்ளி இரதம் 1 தங்கத் திருவாசி உள்பட ரூ. 125000—0—0

52. வெள்ளி இரதம் நிற்கும் கொட்டகை, கல் கட்டிடம் ரூ. 10000-0-0

53. சுவாமியை வெள்ளி இரதத்தில் ஏற்றும் தேர் முட்டிக் கட்டிடம் 1-க்கு ரூ. 3000—0—0



தர்மகர்த்தா, ராவ்பகதூர்.

## திரு. பெ. க. அ. சித. வீரப்ப செட்டியார், M. B. E. அவர்கள் சொந்தத்தில் செய்து சுவாமிக்கு அளித்த நகைகள், வெள்ளி வாகனங்கள் முதலிய விபரம்.

17 மூலஸ்தானம் அம்மனுக்குச் சாத்துபடி செய்த வயிரத் திருமாங்கல்யம் 1. வயிரப் பக்கப்பூ 2. பொன்சங்கிலி உள்பட உருப்படி 1-ல் மொத்தம் வயிரம் 125-க்கு ரூ. 2550—0—0 450-0-0 கூலி உள்பட வயிரத் திருமாங்கல்யம் 1-க்கு ரூ. 3000—0—0

மூலஸ்தானம் அம்மனுக்குச் சாத்துப்படிசெய்த பொன் கர்ன பத்திரத்தில் வயிரத்தோடு பொன் சங்கிலி தனிப்பொன் வில்லை 2. உள்பட ஜதை 1-க்கு உருப்படி 2-ல் வயிரம் 18 க்கு ரூ. 1600-ம் தங்கம் கூலி உள்பட ரூ. 400-ம் ஆக வயிரத்தோடு உள்ள கர்னபத்திரம் ஜதை 1-க்கு ரூ. 2000—0—0

நாயகர் கல்லிழைத்த கர்னபத்திரம் வலது பக்கம் 1-ல் கெம்பு 97. வயிரம் 12. பச்சை 5. தங்கம் உள்பட ஆக மொத்தம் வராகன் எடை 45—5/8 இடது பக்கம் 1-ல் கெம்பு 70. பச்சை 5. வயிரம் 14. தங்கம் உள்பட வராகன் எடை 45½ ஆக வராகன் எடை 91-1/8-க்கு ரூ. 1500—0—0

அம்பாளுக்குச் செய்தளித்த வயிர ஒட்டியாணம் 1-ல் வயிரம் 42. பச்சை 5. கெம்பு 7. தங்கச்சலங்கை 6. கோர்த்த குச்சு 17. ஆகமொத்தம் தங்கம் உள்பட வராகன் எடை 44½க்கு ரூ. 1500—0—0

நாயகர் பக்கத்து அம்மனுக்குச் செய்த கல்லிழைத்த கர்ன பத்திரம் ஜதை 1-ல் கெம்பு 134. வயிரத் தரிப்பு 22. பச்சை 8. தங்கம் உள்பட ஜதை 1—க்கு வராகன் எடை 56-க்கு ரூ 2000—0—0

சோமாஸ்கந்தருக்கு வழங்கிய அபய வயிர அஸ்தம் 1-க்கு வயிரம். 377. சின்னக் கெம்பு 121. பெரிய கெம்பு 1. சின்னப் பச்சை 2I. உள்ளங்கை நடுச் சதுரப்பச்சை 1. தங்கம் உள்பட உருப்படி 1-க்கு வராகன் எடை 111க்கு ரூ 15000—0—0

மூலஸ்தானம் அம்மனுக்குக் கொடுத்த தங்கமுலாம் பத்ம பீடம் உருப்படி 2-க்கு 500—0—0

தாம்பரத் தகட்டின்பேரில் தும்புரு நாரதர் உருப்படி 2-க்கு தங்கத்தகடு 7 போட்டுச் செய்ததற்குக் கூலி உள்பட ரூ 2300—0—0

மரத்தின் பேரில் தும்புரு நாரதர் உருப்படி 2-க்கு தங்கரேக்குப் போட்டதற்குக் கூலி உள்பட ரூ. 300—0—0

வெள்ளிப் பெரிய இந்திர விமானம் 1-க்குக் கூலி உள்பட ரூ. 35000—0—0

ஷெக்குக் கட்டிடம் ரூ. 8000—0—0

வெள்ளிச் சின்ன இந்திர விமானம் 1க்குக் கூலி உள்பட ரூ. 15000—0—0

வெள்ளி எடுபிடி உபசாரம் வெள்ளிக் காம்பு உள்பட வெள்ளிச் சுருட்டி 2' வெள்ளிக் காம்பு உள்பட வெள்ளிப் பாவட்டா 2. வெள்ளிக்காம்புஉள்பட வெள்ளிவிசிறி 2 ஆகஉருப்படி 6-க்குத் தங்கக் குமிழ் உள்பட ரூ. 2565—0—0

வெள்ளிக் குடைகள் 2ம் அழித்து நவக்கிரகம் 8. மூர்த்திகளுக்குக் கவசமும் பழநி ஆண்டவருக்குக் கவசமும் 5. அடுக்குத் தீபாராதனைச் செட்டு 3-ம் ஷெ தீபாராதனை உபசாரச் சாமான்கள்செட்டு 3-ம் கற்பூரக் கிளை 3. உள்படவும் கூலி உள்பட ரூ. 2500—0—0

கோபுரத்திலேயனுர் என்ற சுப்பிரமணிய சுவாமிக்கு ஷ அம்பாள் வள்ளியம்மை தெய்வானைக்கும் அருணகிரிநாத சுவாமிக்கும் வெள்ளிக் கவசங்கள் கூலிஉள்பட
ரூ. 3000—0—0

சோமாஸ்கந்தருக்குப் படிச் சட்டத்தின் பேரில் வெள்ளித் தகடுபோட்டது ரூ. 300—0—0

கோபுரத்திலேயனுர் தெட்சணமூர்த்தி வேணுகோபாலசுவாமி சுப்பிரமணிய சுவாமி பள்ளியறை வயிரவர் சண்டீசுவரர் மஹாலட்சுமி தெண்டாயுதபாணி இந்தச் சந்நிதிகளுக்குப் பித்தளைப் படிபோட்டதும் பீடங்கள் பித்தளைத் தகட்டினுல் செய்ததும் தகடு கிரையம் கூலிஉள்பட ரூ. 3000—0—0

துர்க்காம்பாளுக்கு வழங்கிய வெள்ளிக் கவசங்கள்
ரூ. 500—0—0

ஷ அம்மனுக்குப் பித்தளைத் திருவாசி ரூ. 50—0—0

மூலஸ்தானங்களுக்கும் உற்சவர்களுக்கும் பட்டு சரிகை வகையருக்கள் வாங்கிய வகையில் ரூ. 2000—0—0

ஆக மொத்தம் எண்ணிக்கை 20-க்கு ரூ. 100015—0—0







# திருவண்ணுமலைத் தெய்வப்பாடல்

## திருவாசகம்

அண்ணு மலைஎம் அண்ணு போற்றி!
கண்ணர் அமுதக் கடலே போற்றி!

அண்ணு மலையான் அடிக்கமலம் சென்றுஇறைஞ்சும்
விண்ணேர் முடியின் மணித்தொகைவீறு அற்றல்போல்
கண்ணர் இரவி கதிர்வந்து கார்கரப்ப,
தண்ஆர் ஒளிமழுங்கித் தாரகைகள் தாம்அகல,
பெண்ஆகி ஆணய் அலியாய்ப் பிறங்குஒளிசேர்
விண்ஆகி மண்ஆகி இத்தனையும் வேறுஆகி,
கண்ஆர் அமுதமுமாய் நின்றன் கழல்பாடிப்
பெண்ணே!இப் பூம்புனல்பாய்ந்து ஆடேல்ஓர் எம்பாவாய்! 1

விண்ஆளும் தேவர்க்கும் மேலாய வேதியனை
மண்ஆளும் மன்னவர்க்கும் மாண்பாகி நின்றனைத்
தண்ஆர் தமிழ்அளிக்கும் தண்பாண்டி நாட்டானைப்
பெண்ஆளும் பாகனைப் பேணு பெருந்துறையில்
கண்ஆர் கழல்காட்டி நாயேனை ஆட்கொண்ட
அண்ணு மலையானைப் பாடுதும்காண் அம்மானய். 2

### சம்பந்தர் தேவாரம்

உண்ணுமுலை உமையாளொடும் உடனகிய ஒருவன்
பெண்ணகிய பெருமான்மலை திருமாமணி திகழ
மண்ணர்ந்தன அருவித்திரள் மழலைம்முழவு அதிரும்
அண்ணுமலை தொழுவார்வினை வழுவாவண்ணம் அறுமே. 3





தேமாங்கனி கடுவன்கொள விடுகொம்பொடு தீண்டித்
தூமாமழை துறுவல்மிசை சிறுநுண்துளி சிதற
ஆமாம்பிணை அணையும்பொழில் அண்ணாமலை அண்ணல்
பூமாங்கழல் புனைசேவடி நினைவார்வினை இலரே. 4

பீலிம்மயில் பெடையோடுறை பொழில்சூழ்கழை முத்தம்
சூலிம்மணி தரைமேல்நிறை சொரியும்விரி சாரல்
ஆலிம்மழை தவழும்பொழில் அண்ணாமலை அண்ணல்
காலன்வலி தொலைசேவடி தொழுவாரன புகழே. 5

உதிரும்மயிர் இடுவெண்தலை கலனாஉல கெல்லாம்
எதிரும்பலி உணலாகவும் எருதேறுவது அல்லால்
முதிருஞ்சடை இளவெண்பிறை முடிமேல்கொள அடிமேல்
அதிருங்கழல் அடிகட்கிடம் அண்ணாமலை அதுவே. 6

மரவஞ்சிலை தரளம்மிகு மணிஉந்துவெள் அருவி
அரவஞ்செய முரவம்படும் அண்ணாமலை அண்ணல்
உரவஞ்சடை உலவும்புனல் உடனாவதும் ஓரார்
குரவங்கமழ் நறுமென்குழல் உமைபுல்குதல் குணமே. 7

பெருகும்புனல் அண்ணாமலை பிறைசேர்கடல் நஞ்சைப்
பருகுந்தனை துணிவார்பொடி அணிவாரது பருகிக்
கருகும்மிடறு உடையார்கமழ் சடையார்கழல் பரவி
உருகும்மனம் உடையார்தமக்கு உறுநோயடை யாவே. 8

கரிகாலன குடர்கொள்வன கழுகாடிய காட்டில்
நரியாடிய நகுவெண்தலை உதையுண்டவை உருள
எரியாடிய இறைவர்க்கிடம் இனவண்டிசை முரல
அரியாடிய கண்ணாளொடும் அண்ணாமலை அதுவே. 9

ஒளிறூபுலி அதளாடையன் உமையஞ்சுதல் பொருட்டா,
பிளிறூகுரல் மதவாரண வதனம்பிடித்து உரித்து
வெளிறூபட விளையாடிய விகிர்தன் இரா வணனை
அளறூபட அடர்த்தானிடம் அண்ணாமலை அதுவே. 10

விளவார்கனி படநூறிய கடல்வண்ணனும் வேதக்
கிளர்தாமரை மலர்மேலுறை கேடில்புக ழோனும்
அளவாவணம் அழலாகிய அண்ணாமலை அண்ணல்
தளராமுலை முறுவல்உமை தலைவன்அடி சரணே. 11

வேர்வந்துற மாசுஊர்தர வெயில்நின்றுழல் வாரும்
மார்பம்புதை மலிசீவர மறையாவரு வாரும்
ஆரம்பர்தம் உரைகொள்ளன்மின் அண்ணாமலை அண்ணல்
கூர்வெண்மழுப் படையான்நல்ல கழல்சேர்வது குணமே. 12

வெம்புந்திய கதிரோன்ஒளி விலகும்விரி சாரல்
அம்புந்திமூ எயிலெய்தவன் அண்ணாமலை அதனைக்
கொம்புந்துவ குயிலாலுவ குளிர்காழியுள் ஞான
சம்பந்தன தமிழ்வல்லவர் அடிபேணுதல் தவமே. 13

பூவார் மலர்கொண்டு அடியார் தொழுவார்
புகழ்வார் வானோர்கள்
மூவார் புரங்கள் எரித்த அன்று
மூவர்க்கு அருள்செய்தார்
தூவா மழைநின்று அதிர வெருவித்
தொறுவின் நிரையோடும்
ஆமாம் பிணைவந்து அணையுஞ் சாரல்
அண்ணா மலையாரே 14





மஞ்சைப் போழ்ந்த மதியஞ் சூடும்
வானோர் பெருமானார்
நஞ்சைக் கண்டத்து அடக்கும் அதுவும்
நன்மைப் பொருள்போலும்
வெஞ்சொற் பேசும் வேடர் மடவார்
இதணம் அதுஏறி
அஞ்சொற் கிளிகள் ஆயோ என்னும்
அண்ணா மலையாரே. 15

ஞானத் திரளாய் நின்றபெருமான்
நல்ல அடியார்மேல்
ஊனத் திரளை நீக்கும் அதுவும்
உண்மைப் பொருள்போலும்
ஏனத் திரளோடு இனமான் கரடி
இழியும் இரவின்கண்
ஆனைத் திரள்வந்து அணையுஞ் சாரல்
அண்ணா மலையாரே. 16

இழைத்த இடையாள் உமையாள் பங்கர்
இமையோர் பெருமானார்
தழைத்த சடையார் விடையொன்று ஏறித்
தரியார் புரமெய்தார்
பிழைத்த பிடியைக் காணாது ஓடிப்
பெருங்கை மதவேழம்
அழைத்துத் திரிந்தங்கு உறங்குஞ் சாரல்
அண்ணா மலையாரே. 17

உருவில் திகழும் உமையாள் பங்கர்
இமையோர் பெருமானர்
செருவில் ஒருகால் வளைய ஊன்றிச்
செந்தீ எழுவித்தார்
பருவில் குறவர் புனத்தில் குவித்த
பருமா மணிமுத்தம்
அருவித் திரளோடு இழியுஞ் சாரல்
அண்ணா மலையாரே. 18

எனைத்தோர் ஊழி அடியார் ஏத்த
இமையோர் பெருமானர்
நினைத்துத் தொழுவார் பாவந் தீர்க்கும்
நிமலர் உறைகோயில்
கனைத்த மேதி காணுது ஆயன்
கைமேற் குழல்ஊத
அனைத்துஞ் சென்று திரளுஞ் சாரல்
அண்ணா மலையாரே. 19

வந்தித் திருக்கும் அடியார் தங்கள்
வருமேல் வினையோடு
பந்தித் திருந்த பாவந் தீர்க்கும்
பரமன் உறைகோயில்
முந்தி யெழுந்த முழவின் ஓசை
முதுகல் வரைகள்மேல்
அந்திப் பிறைவந்து அணையுஞ் சாரல்
அண்ணா மலையாரே. 20

மறந்தான் கருதி வலியை நினைந்து
மாறு யெடுத்தான்தோள்
நிறந்தான் முரிய நெரிய ஊன்றி
நிறைய அருள்செய்தார்
திறந்தான் காட்டி அருளா யென்று
தேவ ரவர்வேண்ட
அறந்தான் காட்டி அருளிச் செய்தார்
அண்ணா மலையாரே. 21

தேடிக் காணார் திருமால் பிரமன்
தேவர் பெருமானை
மூடி ஓங்கி முதுவேய் உகுத்த
முத்தம் பலகொண்டு
கூடிக் குறவர் மடவார் குவித்துக்
கொள்ள வம்மினென்று
ஆடிப் பாடி அளக்குஞ் சாரல்
அண்ணா மலையாரே. 22

தட்டை இடுக்கித் தலையைப் பறித்துச்
சமணே நின்றுண்ணும்
பிட்டர் சொல்லுக் கொள்ள வேண்டா
பேணித் தொழுமின்கள்
வட்ட முலையாள் உமையாள் பங்கர்
மன்னி உறைகோயில்
அட்டம் ஆளித் திரள்வந்து அணையும்
அண்ணா மலையாரே. 23

அல்லாடு அரவம் இயங்குஞ் சாரல்
அண்ணா மலையாரை
நல்லார் பரவப் படுவான் காழி
ஞான சம்பந்தன்
சொல்லால் மலிந்த பாட லான
பத்தும் இவைகற்று
வல்லார் எல்லாம் வானோர் வணங்க
மன்னி வாழ்வாரே. 24

## திருநாவுக்கரசர் தேவாரம்

ஓதிமா மலர்கள் தூவி உமையவள்
பங்கா மிக்க
சோதியே துளங்கும் எண்தோள் சுடர்மழுப்
படையி னானே
ஆதியே அமரர் கோவே அணியணா
மலையு ளானே
நீதியால் நின்னை அல்லால் நினையுமா
நினைவி லேனே 25

பண்தனை வென்ற இன்சொற் பாவையோர்
பங்க நீல
கண்டனே கார்கொள் கொன்றைக் கடவுளே
கமல பாதா
அண்டனே அமரர் கோவே அணியணா
மலையு ளானே
தொண்டனேன் உன்னை அல்லால் சொல்லுமா
சொல்லி லேனே. 26

உருவமும் உயிரும் ஆகி ஓதிய
    உலகுக் கெல்லாம்
பெருவினை பிறப்பு வீடாய் நின்றஎம்
    பெருமான் மிக்க
அருவிபொன் சொரியும் அண்ணு மலையுளாய்
    அண்டர் கோவே
மருவிநின் பாதம் அல்லால் மற்றொரு
    மாடி லேனே. 27

பைம்பொனே பவளக் குன்றே பரமனே
    பால்வெண் ணீரு
செம்பொனே மலர்செய் பாதா சீர்தரு
    மணியே மிக்க
அம்பொனே கொழித்து வீழும் அணியணு
    மலையு ளானே
எம்பொனே உன்னை அல்லால் ஏதுநான்
    நினைவி லேனே. 28

பிறையணி முடியி னானே பிஞ்ஞகா
    பெண்ணோர் பாகா
மறைவலா இறைவா வண்டார் கொன்றையாய்
    வாம தேவா
அறைகழல் அமரர் ஏத்தும் அணியணு
    மலையு ளானே
இறைவனே உன்னை யல்லால் யாதுநான்
    நினைவி லேனே. 29





புரிசடை முடியின் மேலோர் பொருபுனற்
கங்கை வைத்துக்
கரியுரி போர்வை யாகக் கருதிய
கால காலா
அரிகுலம் மலிந்த அண்ணா மலையுளாய்
அலரின் மிக்க
வரிமிகு வண்டு பண்செய் பாதநான்
மறப்பி லேனே. 30

இரவியும் மதியும் விண்ணும் இருநிலம்
புனலும் காற்றும்
உரகமார் பவனம் எட்டுத் திசையொளி
உருவ மானாய்
அரவுமிழ் மணிகொள் சோதி அணியணா
மலையு ளானே
பரவுநின் பாத மல்லால் பரமநான்
பற்றி லேனே. 31

பார்த்தனுக்கு அன்று நல்கிப் பாசுப
தத்தை ஈந்தாய்
நீர்த்ததும்பு உலாவு கங்கை நெடுமுடி
நிலவ வைத்தாய்
ஆர்த்துவந்து ஈண்டு கொண்டல் அணியணா
மலையு ளானே
தீர்த்தனே நின்றன் பாதத் திறமலால்
திறமி லேனே. 32





பாலும்நெய் முதலா மிக்க பசுவில்ஐந்து
ஆடு வானே
மாலும்நான் முகனுங் கூடிக் காண்கிலா
வகையுள் நின்ருய்
ஆலும்நீர் கொண்டல் பூகம் அணியணு
மலையு ளானே
வாலுடை விடையாய் உன்தன் மலரடி
மறப்பி லேனே. 33

இரக்கமொன்று யாதும் இல்லாக் காலனைக்
கடிந்த எம்மான்
உரத்திஞல் வரையை ஊக்க ஒருவிரல்
நுதியி ஞலே
அரக்கனை நெரித்த அண்ணு மலையுளாய்
அமரர் ஏறே
சிரத்திஞல் வணங்கி ஏத்தித் திருவடி
மறப்பி லேனே. 34

வட்ட னம்மதி சூடியை வானவர்
சிட்ட னைத்திரு வண்ணு மலையனை
இட்ட னைஇகழ்ந் தார்புரம் மூன்றையும்
அட்ட னைஅடி யேன்மறந்து உய்வனே. 35

வான னம்மதி சூடிய மைந்தனைத்
தேன னைத்திரு வண்ணு மலையனை
ஏன னைஇகழ்ந் தார்புரம் மூன்றெய்த
ஆன னைஅடி யேன்மறந் துய்வனே. 36

மத்த னைம்மத யானை உரித்தஎம்
சித்த னைத்திரு வண்ணா மலையனை
முத்த னைம்முனிந் தார்புரம் மூன்றெய்த
அத்த னைஅடி யேன்மறந்து உய்வனே. 37

காற்ற னைக்கலக் கும்வினை போய்அறந்
தேற்ற னைத்திரு வண்ணா மலையனைக்
கூற்ற னைக்கொடி யார்புரம் மூன்றெய்த
ஆற்ற னைஅடி யேன்மறந்து உய்வனே. 38

மின்ன னைவினை தீர்த்தெனை ஆட்கொண்ட
தென்ன னைத்திரு வண்ணா மலையனை
என்ன னையிகழ்ந் தார்புரம் மூன்றெய்த
அன்ன னைஅடி யேன்மறந்து உய்வனே. 39

மன்ற னைம்மதி யாதவன் வேள்விமேல்
சென்ற னைத்திரு வண்ணா மலையனை
வென்ற னைவெகுண் டார்புரம் மூன்றையுங்
கொன்ற னைக்கொடி யேன்மறந்து உய்வனே. 40

வீர னைவிடம் உண்டனை விண்ணவர்
தீர னைத்திரு வண்ணா மலையனை
ஊர னைஉண ரார்புரம் மூன்றெய்த
ஆர னைஅடி யேன்மறந்து உய்வனே. 41

கருவி னைக்கடல் வாய்விடம் உண்டஎம்
திருவி னைத்திரு வண்ணா மலையனை
உருவி னைஉண ரார்புரம் மூன்றெய்த
அருவி னைஅடி யேன்மறந்து உய்வனே. 42





அருத்த னைஅரவு ஐந்தலை நாகத்தைத்
திருத்த னைத்திரு வண்ணா மலையனைக்
கருத்த னைக்கடி யார்புரம் மூன்றெய்த
அருத்த னைஅடி யேன்மறந்து உய்வனே. 43

அரக்க னைஅல றவ்விரல் ஊன்றிய
திரத்த னைத்திரு வண்ணா மலையனை
இரக்க மாய்என் உடலுறு நோய்களைத்
துரக்க னைத்தொண்ட னேன்மறந்து உய்வனே. 44

பட்டி ஏறுகந்து ஏறிப் பலஇலம்
இட்ட மாக இரந்துண்டு உழிதரும்
அட்ட மூர்த்திஅண் ணாமலை கைதொழக்
கெட்டுப் போம்வினை கேடில்லை காண்மினே. 45

பெற்றம் ஏறுவர் பெய்பலிக்கு என்றவர்
சுற்ற மாமிகு தொல்புக ழாளொடும்
அற்றம் தீர்க்கும்அண் ணாமலை கைதொழ
நற்ற வத்தொடு ஞானத் திருப்பரே. 46

பல்லி லோடுகை ஏந்திப் பலஇலம்
ஒல்லை சென்றுணங் கல்கவர் வாரவர்
அல்லல் தீர்க்கும்அண் ணாமலை கைதொழ
நல்ல வாயின நம்மை அடையுமே. 47

பாடிச் சென்று பலிக்கென்று நின்றவர்
ஓடிப் போயினர் செய்வதொன்று என்கொலோ
ஆடிப் பாடிஅண் ணாமலை கைதொழ
ஓடிப் போகும்நம் மேலை வினைகளே. 48

தேடிச் சென்று திருந்தடி ஏத்துமின்
நாடி வந்தவர் நம்மையும் ஆட்கொள்வர்
ஆடிப் பாடிஅண் ணாமலை கைதொழ
ஓடிப் போம்நமது உள்ள வினைகளே. 49

கட்டி ஒக்குங் கரும்பி னிடைத்துணி
வெட்டி வீணைகள் பாடும் விகிர்தனார்
அட்ட மூர்த்திஅண் ணாமலை மேவிய
நட்டம் ஆடியை நண்ணநன் காகுமே. 50

கோணிக் கொண்டையர் வேடமுன் கொண்டவர்
பாணி நட்டங்கள் ஆடும் பரமனார்
ஆணிப் பொன்னன்அண் ணாமலை கைதொழப்
பேணி நின்ற பெருவினை போகுமே. 51

கண்டம் தான்கறுத் தான்காலன் ஆருயிர்
பண்டு கால்கொடு பாய்ந்த பரமனார்
அண்டத்து ஓங்கும்அண் ணாமலை கைதொழ
விண்டு போகும்நம் மேலை வினைகளே. 52

முந்திச் சென்றுமுப் போதும் வணங்குமின்
அந்தி வாயொளி யான்தன்அண் ணாமலை
சிந்தி யாஎழு வார்வினை தீர்த்திடும்
கந்த மாமலர் சூடுங் கருத்தனே. 53

மறையி னான்நெடு மாலவன் காண்கிலா
நிறையும் நீர்மையுள் நின்றருள் செய்தவன்
உறையும் மாண்பின்அண் ணாமலை கைதொழப்
பறையும் நாஞ்செய்த பாவங்க ளானவே. 54

நாதர் மருவும் திருமலைகள்
நாடும் பதிகள் பலமிகவும்
காதல் கூரச் சென்றிறைஞ்சிக்
கலந்த இசைவண் தமிழ்பாடி
மாதொர் பாகர் அருளாலே
வடபால் நோக்கி வாகீசர்
ஆதி தேவர் அமர்ந்ததிரு
அண்ணா மலையை நண்ணினார். 55

செங்கண் விடையார் திருவண்ணா
மலையைத் தொழுது வலங்கொண்டு
துங்க வரையின் மிசைஏறித்
தொண்டர் தொழும்புக்கு எதிர்நிற்கும்
அங்கண் அரசைத் தொழுதெழுந்து
திளைத்துத் திருநா வுக்கரசர்
தங்கு பிறப்பே வீட்டினுக்கு
மேலாம் பெருமை சாதித்தார். 56

அண்ணா மலைமேல் அணிமலையை
ஆரா அன்பின் அடியவர்தம்
கண்ணார் அமுதை விண்ணோரைக்
காக்கக் கடலில் வந்தெழுந்த
உண்ணா நஞ்சம் உண்டானைக்
கும்பிட்டு உருகும் சிந்தையுடன்
பண்ணார் பதிகத் தமிழ்பாடிப்
பணிந்து பரவிப் பணிசெய்தார். 57

அண்ணு மலேஅங்கு அமரர்பிரான்
வடிவு போன்று தோன்றுதலும்
கண்ணுல் பருகிக் கைதொழுது
கலந்து போற்றும் காதலினுல்
உண்ணு முலேயாள் எனும்பதிகம்
பாடித் தொண்டர் உடன்போந்து
தெண்ணீர் முடியார் திருஅண்ணு
மலேயைச் சென்று சேர்வுற்ருர். 58

அங்கண் அணேவார் பணிந்தெழுந்து
போற்றி செய்துஅம் மலேமீது
தங்கு விருப்பில் வீற்றிருந்தார்
தாள்தா மரைகள் தம்முடிமேல்
பொங்கும் ஆர்வத் தொடும்புனேந்து
புளகம் மலர்ந்த திருமேனி
எங்கும் ஆகிக் கண்பொழியும்
இன்ப அருவி பெருக்கினுர். 59

ஆதி மூர்த்தி கழல்வணங்கி
அங்கண் இனிதின் அமருநாள்
பூத நாத ரவர்தம்மைப்
'பூவார் மல'ராற் போற்றிசைத்துக்
காத லால்அத் திருமலேயிற்
சிலநாள் வைகிக் கமழ்கொன்றை
வேத கீதர் திருப்பதிகள்
பிறவும் பணியும் விருப்புறுவார். 60

## வில்லிபாரதம்

பெற்றாள்சகத்து அண்டங்கள் அனைத்தும் அவைபெற்றும்
முற்றாமுகிழ் முலையாளொடு முக்கண்ணர் விரும்பும்
பற்றாம்என மிக்கோர்இகழ் பற்றுஒன்றினும் உண்மை
கற்றார்தொழும் அருணாசலம் அன்போடுகை தொழுதான். 61

## குகை நமச்சிவாயர்

பொல்லாத என்பிறவிப் புண்ணுக்கு ஒருமருந்து
சொல்லாய்! அருணகிரிச் சோதியே!—எல்லாரும்
போற்ற நடம்புரியும் புண்ணியா! நான்மறைகள்
ஏற்றும் சிவலோக னே! 62

பூமாலை சாத்திப் புவிபுகழ்சோ ணாசலற்குப்
பாமாலை சூட்டிப் பலகாலும்—நாமாலை
பண்ணா யிரம்பாடிப் பார்த்திருக்க நாயேற்குக்
கண்ணா யிரம்வேண்டும் காண். 63

## குருநமச்சிவாயர்

பேசுமவர் வஞ்சப் பிறப்பறுக்கும் என்றுஉலகில்
வீசுபுகழ்ச் சோணகிரி வித்தகா!—மாசிலா
அண்ணா மலையானே! அன்னைவயிற்று என்னைஉருப்
பண்ணாமல் ஐயா!கண் பார். 64

கருணால யா!நின் கழல்பணிய மாட்டேன்
அருணாச லாஎன்று அழையேன்—மரணாந்த
காலத்தில் ஓதும் கருத்தறியேன்; கண்ணைஉன்தன்
கோலத்தில் வையேன் குறித்து. 65





### அண்ணுமலை வெண்பா

ஆதி,நடம் ஆடுமலை; அன்றுஇருவர் தேடுமலை;
சோதிமதி ஆடுஅரவம் சூடுமலை;—நீதி
தழைக்குமலை; ஞானத் தபோதனரை 'வா'என்று
அழைக்குமலை, அண்ணு மலை. 66

கூற்றை உதைத்தமலை; கோமாறன் கூடல்வைகை
ஆற்றை அடைத்தமலை; ஆரூரன்-போற்றச்
சிறந்தமலை; தீவினையேன் செய்தகுறை எல்லாம்
மறந்தமலை; அண்ணு மலை. 67

கண்டம் கரியமலை; கண்மூன்று உடையமலை;
அண்டர்எல்லாம் போற்றற்கு அரியமலை;—தொண்டருக்குத்
தோற்றுமலை; நாளும் தொழுவோர் எழுபிறப்பை
மாற்றுமலை, அண்ணு மலை. 68

### அருணுசலப்புராணம்

இரவிகள் சந்திரர் வயிரவர்
 விஞ்சையர் இமையவர் எண்திசையோர்
உரகர் அருந்தவர் முனிவரர்
 பங்கயர் உவணநெ டுங்கொடியோர்
பரவி நெருங்கலில் உலகம்
 நிறைந்தவர் பணியும் இடங்கிடையாது
'அரகர' என்பது கடலின்
 முழங்கியது அருணை வளம்பதியே. 69





ஒருமானைக் கரத்தினில்வைத்து ஒருமானைச்
சிரத்தினில்வைத்து உலகம் ஏழும்
தரும்மானை இடத்தினில்வைத்து அருள்வானை,
பவளநெடும் சயிலம் போல
வரும்ஆனை முகத்தானை அளித்தானை,
பொரும்ஆனை மகிழ ஏறும்
பெருமானை, அருணகிரிப் பெம்மானை,
அடிபணிந்து, பிறவி தீர்ப்பாம். 70

கார்ஒழுகும் குழலாளை, கருணைவழிந்து
ஒழுகும்இரு கடைக்கண் ணாளை,
மூரல்இள நிலவுஒழுகப் புழுகுஒழுக
அழகுஒழுகும் முகத்தி னாளை,
வார்ஒழுகும் தனத்தாளை, வடிவுஒழுகித்
தெரியாத மருங்கு லாளை,
சீர்ஒழுகும் பதத்தாளை, அருணை உண்ணா
முலையாளைச் சிந்தை சேர்ப்பாம். 71

கொந்தாரும் மலர்ச்சோலை அருணைநெடும்
கோபுரத்தில் குமர வேளை,
வந்தாரை வாழ்விக்க, வடவீதி
தனில்உறையும் மயிலி னானை,
கந்தாரும் கடக்களிற்று மகவாற்குத்
தருநிழலும் கனக நாடும்
தந்தானை, அலர்கடப்பம் தாரானைப்
பணிபவர்தாள் தலைமேல் கொள்வாம். 72

அருங்கவி வாத வூரனே முதலோர்
அன்பிலேம் என்றுஅது வேண்டி
இரங்குதல் பொய்ம்மை; அன்பிலேன் எனயான்
இயம்பலே மெய்எனக்கு அருளாய்.
கரும்கடம் உமிழும் ஈர்ங்கவுள் பணைக்கைக்
கரிஉரிக் கஞ்சுகம் கடுப்ப,
தரங்கம்உண்டு எழுகார் முகில்பயில் சோண
சைலனே கைலைநா யகனே. 73

மாங்குயில் மிழற்றும் நாவலூர்ப் புலவன்
மறுப்பவும் முடிமிசை இருத்தும்
பூங்கழல் அடியேன் முடிமிசை இருத்தப்
புகலினும் என்கொல்நீ இரங்காய்?
ஓங்குறும் அண்ட கோளகை அளவும்
உயர்ந்தும்ஓர் மழவிடை முதுகில்
தாங்குபு நடக்க இருந்திடும் சோண
சைலனே கைலைநா யகனே. 74

ஐயநுண் மருங்குல் மாதர்மேல் வைத்த
ஆதரவு உன்பதஅம் புயத்தும்
மெய்யுறு நறுமென் கலவையின் விருப்பம்
வெண்திரு நீற்றினும் வருமோ?
கொய்யுறு தினைவீழ்ந் திடுபசுங் கிள்ளைக்
குழுக்கள்,தோ ரணம்என எழுந்து
தையலர் கடியப் பறந்துறும் சோண
சைலனே கைலைநா யகனே. 75





ஏறுமயில் ஏறிவிளை யாடுமுகம் ஒன்றே;
ஈசருடன் ஞானமொழி பேசுமுகம் ஒன்றே;
கூறுமடி யார்கள்வினை தீர்க்குமுகம் ஒன்றே;
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுகம் ஒன்றே;
மாறுபடு சூரரை வதைத்தமுகம் ஒன்றே;
வள்ளியை மணம்புணர வந்தமுகம் ஒன்றே;
ஆறுமுகம் ஆனபொருள் நீயருளல் வேண்டும்,
ஆதியரு ணாசலம்அ மர்ந்தபெரு மாளே. 76

இரவுபகல் பலகாலும் இயலிசைமுத் தமிழ்கூறித்
திரமதனைத் தெளிவாகத் திருவருளைத் தருவாயே!
பரகருணைப் பெருவாழ்வே! பரசிவதத் துவஞானா!
அரனருள்சற் புதல்வோனே! அருணகிரிப் பெருமாளே. 77

கீதவி நோதமெச்சு குரலாலே,
கீறுமை யார்முடித்த குழலாலே,
நீதியி லாதழித்தும் உழலாதே,
நீமயி லேறியுற்று வரவேணும்;
சூதமர் சூரருட்க வருசூரா!
சோணகி ரியிலுற்ற குமரேசா!
ஆதியர் காதொருச்சொல் அருள்வோனே!
ஆனைமு கார்கனிட்ட பெருமாளே. 78

இருவினை மங்க, மலவகை மங்க,
இருள்பிணி மங்க, மயிலேறி,
இனவரு என்பு பொழியக டம்பு
விதைக முங்கொ டளிபாடக்
கரிமுகன் எம்பி முருகனென் அண்டர்
களிமலர் சிந்த அடியேன்முன்
கருணைபொ ழிந்து முகமும லர்ந்து
கடுகிந டங்கொ டருள்வாயே
திரிபுரம் மங்க, மதனுடல் மங்க,
திகழ்நகை கொண்ட விடையேறி
சிவம்வெளி யங்கண் அருள்குடி கொண்டு
திகழந டஞ்செய் தெமையீனும்
அரசியி டங்கொள் மழுவுடை எந்தை
அமலன்ம கிழ்ந்த குருநாதா!
அருணைவி லங்கல் மகிழ்குற மங்கை
அமளிந லங்கொள் பெருமாளே! 79

## இராமலிங்க சுவாமிகள்

தேடுவார் தேடும் செல்வமே! சிவமே!
திருஅரு ளுபுரித் தேவே!
ஏடுவார் இதழிக் கண்ணிஎங் கோவே!
எந்தையே! எம்பெரு மானே!
பாடுவார்க்கு அளிக்கும் பரம்பரம் பொருளே!
பாவியேன் பொய்எலாம் பொறுத்து
நாடுவார் புகழும் நின்திருக் கோயில்
நண்ணுமா எனக்குஇவண் அருளே. 80



# வாழ்த்துக்கள்

உலககுரு சிரிங்கேரி சாரதாபீடம்

## சங்கராச்சாரிய சுவாமிகள் அவர்கள்

தாங்கள் எழுதிய கடிதமும் சத்திரத்தைப் பற்றிய குறிப்பும் கிடைக்கப்பெற்ளேம். மகாசந்நிதானத்தின் திருவடிகளில் சமர்ப்பிக்கப்பட்டது. மகாசந்நிதானம் தொடர்ந்து ஒரு நூருண்டுகளாக அன்னதானத்துக்கும் அண்ணுமலே அருணுசலேஸ்வரர் ஆலயத்தில் செய்துவரும் சேவைகளுக்கும் மிகவும் சந்தோஷப் பட்டார்கள். இவ்விதம் விடாது ஒரு நூருண்டு செய்துவருவதைக் கொண்டாடவேண்டியது மிகவும் நல்ல காரியம்.

இவ்விதமான தர்மங்கள் மேன்மேலும் வளர்ந்து சாஸ்வதமாக நடந்துவரவும், அதைச் செயலாற்றும் யாவரும் நீடுழி நல்வாழ்வு வாழவும் ஸ்ரீ சாரதா சந்திரமௌலீஸ்வரர் அனுக்கிரகிக்க வேண்டுமென வாழ்த்தி அருளிய மந்திராக்ஷதை ஸ்ரீ சாரதா சந்திரமௌலீஸ்வரப் பிரசாதம் இத்துடன் அனுப்பியிருக்கிறது.



உலக குரு சிரிங்கேரி சாரதாபீடம்
ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள்



ஸ்ரீ காஞ்சி காமகோடிப் பீடாதிபதி
ஜகத்குரு சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமிகளும்
ஸ்ரீ ஜயேந்த்ரஸரஸ்வதி ஸ்வாமிகளும்



தவத்திரு இராமனுத ஞான தேசிக சுவாமிகள், கோவிலூர் மடாதிபதி



காஞ்சிப் புதுப் பெரியவாள் அன்னச் சத்திர விஜயம்

காஞ்சி காமகோடி பீடாதிபதி

## உலககுரு

# சங்கராசார்ய சுவாமிகள் அவர்கள்

செட்டிநாட்டிலுள்ள மெ. க. குடும்பத்தினரால் உயர்ந்த க்ஷேத்ரமான திருவண்ணுமலையில் நூறு வருஷங்களுக்குமுன் ஸ்தாபிக்கப்பட்டுள்ள அன்ன சத்திரத்தின் ஆதரவில் வெளியூர்களிலிருந்து வரும் அடியார்களுக்கு உணவு அளிப்பதையும், படிக்கும் மாணவர்களுக்கு இலவசமாக உணவு, உடை, உறையுள், புத்தகங்கள் இவைகளை அளிப்பதையும், கார்த்திகை மஹோத்ஸவத்தில் தங்களால் செய்துவைக்கப்பட்ட பெரிய வெள்ளி ரிஷபவாஹனத்தில் ஸ்ரீ அருணுசலேச்வரரை எழுந்தருளச்செய்தல், ஆலயத்துக்குப் பிரதி தினமும் அபிஷேகத்திற்குப் பால் கொடுப்பது முதலிய தொண்டுகளைச் செய்து வருவதையும், இந்தச் சத்திரத்தைச் சேர்ந்தவர்கள் ஸ்ரீ அருணுசலேச்வரருக்கும், அம்பிகைக்கும் பல லக்ஷ ரூபாய் மதிப்புள்ள நகைகள், வாஹனங்கள், தீபங்கள், திருக்குளத் திருப்பணிகள் இவைகளைச்செய்து கும்பாபிஷேகம் செய்து வைத்திருப்பதையும், சமீபத்தில் இந்தச் சத்திர தர்மத்துக்கு நூருண்டு நிறைவு விழா நடைபெற இருப்பதையும் அறிந்து சந்தோஷிக்கின்ருேம்.

இந்தச் சத்திரத்தின் நிர்வாகத்தினர் இந்தத் தர்மங்களை மேன்மேலும் அபிவிருத்தி செய்துகொண்டு ஸ்ரீ அபீதகுசாம்பிகா ஸமேத ஸ்ரீ அருணுசலேச்வரரின் கிருபையினுல் எல்லா மங்களங்களையும் அடைவார்களாக.

கோவிலூர் மடாதிபதி தவத்திரு.

## இராமநாத ஞான தேசிகர் அவர்கள்

அண்ணாமலை எம் அண்ணா போற்றி
கண்ணார் அமுதக் கடலே போற்றி

"அண்ணாமலை" என்பது 'எட்டாத மலை' என்று பொருள் தரும். அது கண்ணுக்கும் கருத்துக்கும் எட்டாதது.

"மால் அறியா நான்முகனும் காணாமலை" என்பார் மணிவாசகர். கண்ணுக்கும் கருத்துக்கும் எட்டாதது ஆயினும் ஒருமை உளத்துடன் நினைப்பவர்க்கு உலவா முத்தி அளிக்கும் ஒப்பற்ற சிறப்புடையது. அண்ணாமலையை நினைக்கும்பொழுதே வானுற ஓங்கி வளம்பெற விரிந்து பரந்து நிற்கும் அதன் வியாபகத் தன்மை உள்ளத்தை நிறைவிக்கின்றது.

அண்ணாமலையார் ஆலயத்தைக் காணுங்கால். அதன் பெருமையைப் பறைசாற்றும் வகையில், உலகெங்கும் காணா உயர் கோபுரங்களுடனும் நீண்டு உயர்ந்து அகன்ற திருமதில்களுடனும் பல்வகைச் சித்திர மண்டபங்களுடனும் உருவாக்கிய உத்தமர்களின் நிறைவுபெற்ற பரந்த உளப்பாங்கை நன்கு உணரலாகும். ஆலயத்தின் ஒவ்வொரு அமைப்பும் வேறெங்கும் காணக் கிடையா வகையில் உருவமைக்கப் பெற்றுள்ளது அண்ணாமலைக்கே உரிய தனிச் சிறப்பாகும்.

சீர் நிறைந்தோங்கும் திருவண்ணாமலை ஆலயத் திருப்பணியில் நாட்டுக்கோட்டை நகரத்தார் 'என வழங்கும் தனவைசியப் பெருமக்களுக்குப் பெரும் பங்கு உண்டு. அதிலும் "அண்ணாமலையார் துணை"யை ஆதாரமாகக் கொண்டு, அடுக்கிய பலகோடி செல்வம் திரட்டிய கோட்டையூர் மெ. க. குடும்பத்தினரின் அரும் பெரும் பணிகளுக்கு ஈடு, இணை இல்லை.





ஸ்ரீ அண்ணாமலைப் பெருமானின் திருவுருவ அமைப்பிற்கு ஏற்ற வகையில் கோட்டையூர் மெ. க. குடும்பத்தினர் சொந்த மாகச் செய்துவைத்துள்ள வெள்ளி ரிஷபவாகனம் தரணியில் இல்லாத தனி வடிவமைப்பும் பொலிவும் கொண்டு திகழ்வது. நன்கு ஊன்றிக் கவனித்தால் "உலகனைத்தையும் தாங்கும் ஒப்பற்ற முழுமுதற் பெருமானைத் தன் முதுகின்மேல் தாங்கும் பேறுபெற்ற பெருமிதச் செருக்கின் வெளிப்பாடு அதன் முகத்தில் தோன்றக் காணலாம்.

திருக்கார்த்திகைப் பெருவிழா-ஐந்தாம் நாளில் ஸ்ரீ அண்ணா மலைப் பெருமான் அந்த ரிஷபத்தின்மீது அமர்ந்தருளும் காட்சியும் ரிஷபத்தின் பக்கலில் பிரமாண்டமான குடையைத் தூக்கிநிறுத்தும் காட்சியும் பிரமிக்க வைப்பனவாம்.

கோட்டையூர். மெ. க. குடும்பத்தினருக்கு அண்ணாமலை யாரிடத்து மிக மிக நெருங்கிய ஈடுபாடு உண்டு. ஸ்ரீ அண்ணாமலைப் பெருமான் ஆலயத்தைப் புதுப்பித்து அரும்பெரும் திருப்பணிகள் செய்து கும்பாபிஷேக விழாக்கள் நடத்துவித்ததில் அவர்கள் பெரும் பங்கு கொண்டவர்கள். தவிர "ஆதி அருணாசலம்" எனப் புகழ்பெற்ற அணி அண்ணாமலைத் திருக்கோவிலைப் புதிய பாணி யில் புதுப்பித்துக் கும்பாபிஷேகம் செய்தும் பெரும் பொருள் செலவில் புனித நீர்த் திருக்குளங்கள், ஆலயத்தைச் சார்ந்த அந்தணர் இல்லங்கள், விடுதிகள் கட்டி வைத்தும் பல அறக் கட்டளைகள் ஏற்படுத்தியும் புகழ் பெற்றவர்கள்.

வரையாது வாரி வழங்கிய வள்ளல், டாக்டர் அழகப்பா அவர் களின் முன்னோர்களான மெ. க. குடும்பத்தினர் செய்துள்ள அறப் பணிகள் பலவற்றுள் இந்நாள் நூற்றாண்டு விழாக் கொண்டாடும் அன்ன சத்திரமும் ஒரு அமைப்பாகும். தொடக்கத்தில் அந்தணர் களுக்கு அன்னம் அளிப்பதே பெரு நோக்கமாகக் கொண்ட இந் நிறுவனம் இப்பொழுது காலத்திற்கேற்ப மக்களின் தேவை





யுணர்ந்து கல்வி பயிலும் ஏழை மாணவர்களுக்கு உணவு, உடை, உறையுள், புத்தகங்கள் முதலியன இலவசமாக அளித்து ஆதரித்து வருவது பெரிதும் பாராட்டுதற்குரியது.

அறப் பணிகள் ஆற்றுவதில் ஆர்வம் மிக்குடைய கோட்டையூர் மெ. க. குடும்பத்தினர் "ஸ்ரீ அண்ணாமலையார் துணை" கொண்டு எல்லாச் செல்வங்களும் எய்தி, புகழ் பெற்று வாழவும், அவர்கள் நடத்தி வரும் அறப்பணிகள் மேன்மேலும் பெருகிச் சிறப்புடன் விளங்கவும் இதயபூர்வமாக வாழ்த்துகிறோம்.

ஓம் தத் ஸத்

"அண்ணா மலையார் துணை"கொடுநல்
அருளும் பொருளும் பெற்றுஉயர்ந்தார்
கண்ணார் அமுதக் கடல்இறைக்குக்
கல்லால் ஆன திருப்பணிகள்
எண்ணாது ஈந்தே இனிதுஅமைத்தார்
இவரே . "மேனா கானா"வாம்
உண்ணாது ஏங்கி வருபவர்க்கும்
உவந்தே இடும்நல் அறம்கொண்டார்.

## வாழ்த்து

ஆதியிலே அயன்மாலும் காண்பரியா
அடிமுடியை அகத்தே வைத்தார்;
மாதினியாள் உமையுண்ணா முலைபாதம்
மனத்தகத்தே மாணக் கொண்டார்;
மேதினியில் சிறப்புற்றார்; மெய்யறங்கள்
புரிந்திட்டார்; ✵"மேனா கானா
நீதியிலே உயர்வுடைய நெறிநின்றார்!
அவர்மக்கள் நீடு வாழ்க!

---

✵ மேனா கானா என்பது' மெ. க. என்னும் விலாசம்

# ஸ்ரீ திருச்சி சுவாமிகள் அவர்கள்

"கைலாஸ ஆசிரமம்" பெங்களூர்

மெ. க. அன்னச் சத்திரத்திற்குச் சேர்ந்த குடும்பத்தார் எல்லோருக்கும் எங்களுடைய பூர்ண ஆசீர்வாதம் இருந்து கொண்டே இருக்கிறது.

தொடக்கத்தில் வேத பாடசாலை நடத்திக்கொண்டு வந்த விபரமும் எங்களுக்குத் தெரியும். குழந்தைகளுக்கு உணவு, உடை புத்தகங்கள் முதலியவை கொடுத்துவருகிற விபரமும் எங்களுக்குத் தெரியும். கார்த்திகைப் பெருவிழாவில் 5ஆம் திருநாளில் அண்ணாமலையாரின் வாகனமான வெள்ளிப் பெரிய ரிஷபத்தைப் பார்க்கும்போது உங்களுடைய குடும்பத்தார் ஞாபகம்தான் வருகிறது. அண்ணாமலையார் திருக்கோவிலுக்கு நாள்தோறும் அபிஷேகத்திற்குப் பால் கொடுத்து வருகிறீர்கள். அணி அண்ணாமலைத்திருப்பணியும் கும்பாபிஷேகமும் செய்திருக்கிறீர்கள். 19 வருஷத்திற்கு முன்னால் நாங்களும் திருவண்ணாமலை, ஈசான்ய மடத்தில் இருந்த ஸ்ரீ இராமனாத சுவாமிகள், திருப்புவனம் ஸ்ரீ காசிகானந்த சுவாமிகள், காளையார்கோவில் ஸ்ரீ அருணாசல சுவாமிகள் நால்வரும் தங்கள் சத்திரத்திற்கு வந்து பிச்சைசெய்து வந்தோம். அதுவும் எங்களுக்கு ஞாபகமிருக்கிறது.

ஸ்ரீ அண்ணாமலைப் பெருமான், ஸ்ரீ உண்ணாமுலை அம்பிகை கிருபையாலும் தங்கள் குடும்பத்தார் இன்னும் அனேக தர்மத்தைச் செய்தும், நடத்திவரும் தர்மத்தையும் இன்னும் சிறப்பாக நடக்க வேண்டுமென்றும் தங்களுக்குப் பூர்ண ஆசீர்வாதம் அளித்திருக்கிறோம்.







# தவத்திரு சித்பவானந்த சுவாமிகள்

## இராமகிருஷ்ண தபோவனம்

### திருப்பராய்த்துறை

கடந்த நூறு வருஷங்களாகத் தங்கள் குடும்பம் தங்கு தடையின்றி அருணசலேசுவரர் க்ஷேத்திரத்தில் அன்ன தானத்தையும் ஆலயக் கட்டளைகளையும் முறையாக நடாத்தி வருவது பாராட்டுதற்கு உரிய பெரிய கயிங்கரியங்களாகும். ஆண்டவனுடைய அருளும் கயிங்கரிய மூர்த்திகளுடைய அயர்வில்லாச் சேவையும் ஒன்று சேருமிடத்தே இத்தகைய திருத்தொண்டு இனிது நிறைவேறுகிறது. இதை ஒட்டி நீங்கள் நூருண்டு நிறைவு கொண்டாடுவது முற்றிலும் பொருத்தமானது. இதுகாறும் நிகழ்ந்து வந்துள்ள இப் பணிவிடைகள் இனியும் என்றென்றும் இனிது நிகழ்ந்து வருமாறு இறைவனை வழுத்துகிறேன்.

இங்ஙனம்,
சித்பவானந்த

தருமையாதீனம்

## ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

"ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயுள் உறையும்எம் ஆதியே"

சைவ சமயத்தின் தூண்களாய் உள்ளவை சிவாலயங்கள். அவைகளிலும் பாடல்பெற்ற தலங்கள் மிகச் சிறப்புடையன. இத்தகைய சிவாலயங்களைப் பண்டு சோழ மன்னர்கள் என்றும் நின்று நிலவும்படி சிறந்த வகையில் திருப்பணிகள் பல செய்து, நித்திய நைமித்திகங்களுக்கு நிவந்தங்கள் பல அமைத்து நல்ல வகையில் புரந்து வந்தார்கள். அவர்கட்குப் பின் காலத்தில் நாட்டுக்கோட்டைத் தனவணிகர் இத் திருப்பணியை மேற்கொண்டு பாடல்பெற்ற தலங்களில் அரிய திருப்பணிகள் பல செய்து, பசுமடங்கள், யாத்திரிகர்கள் தங்கும் விடுதிகள் முதலியன அமைத்து, வெள்ளி வாகனங்கள், பொன்னாலும், இரத்தினங்களாலும் ஆகிய திருவாபரணங்கள் முதலியன செய்வித்து நித்திய பூஜைகளுடன், விழாக்களும் சிறப்புற நடத்தினார்கள்.

இவ்வகையில் கோட்டையூர் மெ. க. குடும்பத்தினர் திருவண்ணாமலையில் செய்துள்ள பல திருப்பணிகளில் அன்னச் சத்திரம் அமைத்து அடியார்களுக்கு அன்னம்

அளித்து வருவதுடன், வேத பாடம் முதலிய தெய்வீகக் கல்வி வளர்ச்சிக்கும் ஆவன பல செய்து வருதல் பாராட்டற்குரியது.

"மண் திணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே"

என்று மணிமேகலே, மக்கள் யாவர்க்கும் உணவளிக்கும் அறத்தினைப் பொதுவாகக் கூறுகின்றது. பெரிய புராணம்

"மண்ணினிற் பிறந்தார் பெறும்பயன் மதிசூடும்
அண்ணலார் அடியார்தமை அமுது செய்வித்தல்"

என்ற இறைவனுக்குத் தொண்டு பூண்ட அடியவர்கட்கு அமுதளிக்கும், சிவபுண்ணியத்தின் சிறப்பை விளக்குகின்றது. மெ. க. குடும்பத்தினர் தங்கள் அன்னச் சத்திரத்தின் வழி அடியவர்கட்கு அமுதளிக்கும் பணியைச் செய்து வருதல் குறிப்பிடத்தக்கது.

இவ்வன்னச் சத்திரம் இதுபொழுது நூற்றுண்டு விழா ஏற்பதும், அவ்வமயம் விழா மலர் ஒன்று வெளி வருவதும் மகிழ்ச்சிக்குரியன. நூற்றுண்டு விழா இனிது நிகழ்ந்து விழா மலரும் நன்கு மலர்ந்து, அன்னச்சத்திரம் மேலும் வளர்ச்சியுறுதற்குத் துணை செய்ய ஸ்ரீ செந்தமிழ்ச்சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி

## முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

### ஸ்ரீகாசிமடத்து அதிபர் திருப்பனந்தாள்

இன்நறும் கனிச்சோலைகள் செய்தல், இனிய நீர்த்தண் சுனைகள் இயற்றல், அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல், ஆலயம் பதினாயிரம் நாட்டல்-இவைகளை எல்லாம் சிறந்த தருமங்களின் பட்டியலில் அடக்கினார் அண்மையில் வாழ்ந்த பாரதியார். 'சோறிடும் தண்ணீரும் வாரும் அத்தருமமே சார்பாக மேலிடும் உண்ணீர்மை, என்றார் ஔவையாரும். திருவள்ளுவரும் திருக்குறளில் ''அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன் பெற்றான் பொருள் வைப்புழி'' என்று கூறி யுள்ளார். சங்க காலத்து வள்ளல்களில் ஒருவன் பசிப்பிணி மருத்துவன் எனக்கூறப் பெற்றனன். இத்தகைய சிறப்புடைய அன்னம்பாலிப்புத் தொண்டை அன்னச் சத்திரம்வைத்து ஒரு நூற்றாண்டாகக் கோட்டையூர் மெ. க. குடும்பத்தார் அவர்கள் திருவண்ணாமலையில் நடத்தி வருவது மிகவும் சிறப் புடையதாகும். அவர்கள் இன்னும் பல தொண்டுகளும் அன்னம்பாலிப்புடன் நடத்தி வருவதும் மகிழ்ச்சி தருவதாகும். மெ. க. அன்னச்சத்திரத்தின் தொண்டுகள் ஸ்ரீ செந்திலாண் டவன் திருவருளால் தொடர்ந்து பல நூற்றாண்டுகள் நடை பெற்றுவருவன வாகுக எனச் செந்திலாண்டவன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

**சிவசிவ**



மதுரை ஆதீனம்

தவத்திரு சோமசுந்தர ஞானசம்பந்த தேசிக

பரமாசாரிய சுவாமிகள்

மெ. க. அன்னச் சத்திரத்தின் நூற்ருண்டு விழா 15-11—72ல் நடைபெறத் திருவருள் பாலித்திருப்பதை யறிந்து மகிழ்கின்ருேம்.

அன்னச் சத்திரத்தின் வருவாயைக் கொண்டு தாங்கள் செய்து வரும் புண்ணிய கருமங்களை யறிந்து பாராட்டுகிருேம். அன்னச் சத்திரமும், அதன் கைங்கரியங்களும் மென்மேலும் சிறந்தோங்கி வளர்ந்து அடியார் தொண்டும், அண்ணுமலையார் தொண்டும் சிறப்பாக நடைபெற்று வரவும், இந்தத் தொண்டுகளை ஏற்படுத்தி நடத்திவரும் குடும்பத்தார் எல்லா நலங்களும் பெற்றுத் திகழவும் திருவருள் பாலிக்குமாறு எல்லாம் வல்ல ஸ்ரீ உண்ணுமலையார் சமேத ஸ்ரீ அண்ணுமலையாரைப் பிரார்த்தித்து ஆசிர்வதிக்கின்ருேம்.

ஞானசம்பந்த தேசிகர்





தமிழ்நாடு முதலமைச்சர் கலைஞர், டாக்டர்

மாண்புமிகு

# மு. கருணாநிதி அவர்கள்

நகர்வளம் பெருக்கும் நகரத்தார் சமுதாயம் பண்டுதொட்டே பல நல்லறப் பணிகள் புரிவதில் நாட்டங்கொண்டது என்பதை "நகரத்தார் வரலாறு" நன்குணர்த்தும். தமிழகத் திருத்தலங்களுக்கும், திருக்கோயில்களுக்கும், அன்னச் சத்திரங்களுக்கும் நகரத்தார் சமூகத்திற்கும் மிக நெருங்கிய தொடர்புண்டு. அத்தகு நகரத்தார் சமூகத்தைச் சார்ந்த கோட்டையூர் மெ. க. குடும்பத்தாரால் இற்றைக்கு நூறாண்டுகளுக்கு முன்பு திருவண்ணாமலையில் ஏற்படுத்தப்பெற்ற அன்னச் சத்திரம் கடந்த நூறாண்டுகளாகச் சிறப்புறப் பணியாற்றி, நூற்று ஒன்றுவது ஆண்டில் அடியெடுத்து வைக்கிறது என்பது பெரிதும் பாராட்டிப் போற்றற்குரியது. இன்று அந்தச் சத்திரம், அங்கு பள்ளிகளில் பயிலும் ஏழைக் குழந்தைகளுக்கு இலவச உணவும், உடையும், உறையுளும் புத்தகங்களும் வழங்கிக் காத்துவருகிறது. இத்தகையதொரு நல்ல சமுதாயப் பணி புரிந்து வருகிற அன்னச் சத்திரத்தின் அறப்பணியும் அதையொட்டி நடைபெறும் பல்வேறு திருப்பணிகளும் தொடர்ந்து நடைபெறவும், நூறாண்டு விழாவையொட்டி வெளியிடப்பெறும் 'மலர்' மணம்பெறவும், மெ. க. குடும்பத்தினர் மேலும் பல நல்லறப் பணிகள்புரிந்து புகழ்பெற வாழவும் மனமார விரும்பி வாழ்த்துகிறேன்.

மு. கருணாநிதி





அமைச்சர் மாண்புமிகு

# ப. உ. சண்முகம் அவர்கள்

திருவண்ணுமலேயில் நடைபெற்று வரும் மெ. க. அன்னச் சத்திரத்தின் நூற்ருண்டு விழாவை யொட்டி மலர் வெளியிடுவதையறிந்து மிக்க மகிழ்ச்சி.

சத்திரத்தின் குறிக்கோள் சீரிய முறையில் நிறைவேறவும் நூற்ருண்டு விழா மலர் சிறப்பான முறையில் அமையவும், என் மனமார்ந்த வாழ்த்துக்களேத் தெரிவித்து மகிழ்கிறேன்.

ப. உ. சண்முகம்



## மாண்புமிகு அறநிலைய அமைச்சர்

# மு. கண்ணப்பன்

பேரன்புடையீர்,

உண்ணாமுலையாள் உடனுறை அண்ணாமலையார் உறையும் திருக்கோயில் என்று போற்றப்படும் திரு அருணைநகரில் இல்லையென்று வருவோர்க்கு இலவச உண்டியளித்து உதவிவரும் ''அன்னச்சத்திரம்'' தனது ஈகைப் பணியினை கடந்த 100 ஆண்டுகளாகத் தொடர்ந்து நடாத்தி வந்தது பற்றியும், தனது நூற்றாண்டு விழாவினை வரும் 15—11—72 அன்று கார்த்திகைப் பெருவிழாவோடு இணைத்து நடாத்த இருப்பது பற்றியும் அறிந்து மெத்தவும் மகிழ்ச்சி அடைகிறேன். அன்னச்சத்திரம் உறுபசிபோக்கும் உயர்ந்த தொண்டினைத் தொடர்ந்து நடத்தி, சீர்மை உறவும், இவ்விழாவினையொட்டி வெளியிடப்பட விருக்கும் சிறப்புமலர் மணம் நிறைந்து பரப்பவும் என் நல்வாழத்துக்களை உரித்தாக்கிக் கொள்ளு கிறேன்.

அன்புள்ள,

மு. கண்ணப்பன்





மேன்மை தங்கிய டாக்டர்

## ராசா. சர். மு. அ. முத்தையா செட்டியார் அவர்கள்

செட்டிநாட்டு அரசர்.

நாட்டுக்கோட்டை நகரத்தார் பெருமக்களால் ஏராளமான அன்னச் சத்திரங்கள் நாடு முழுவதும் ஏற்பட்டுள்ளது. அப்படி ஏற்பட்ட சத்திரங்களுள் திருவண்ணாமலை மெ. க. அன்னச் சத்திரம் மிக நல்ல பணி புரிந்துள்ளதென்பது எல்லோருக்கும் நன்ருகத் தெரியும். 18-11-1872-ல் நிறுவப்பட்ட மெ. க. அன்னச் சத்திரம் நூருண்டுகளாகத் தலையாய பணியாக அடியார்களுக்கும், பக்தர் களுக்கும் உணவளித்து வருகிறது. வேத பாடசாலை நடத்தியும் ஏழைப் பிள்ளைகளுக்கு இலவச உணவு, உடை, உறையுள், புத்தகம் அளித்தல் ஆகிய நற்பணிகள் மெ. க. குடும்பத்தார்கள் செய்து வருவதை மகிழ்ச்சியுடன் பாராட்டுகின்றேன். அண்ணுமலையாருக்குக் கார்த்திகை தீபத்தில் ஐந்தாம் திருவிழாவுக்கு மிகப்பெரிய வெள்ளி ரிஷப வாகனமும் செய்து ஷ. வாகன மண்டபப்படியை ஆண்டுதோறும் வெகு சிறப்பாக நடத்திவருவதை அறிய மகிழ்ச்சி. அண்ணுமலையார் திருக் கோவிலுக்கு இன்றும் மெ. க. சத்திரத்தார்கள் அபிஷேகத்திற்குப் பால் கொடுத்து வருவது மிக்க நல்ல பணியாகும். சத்திரத்தை நடத்துபவர்கள் அண்ணுமலையாருக்கும் உண்ணுமுலை அம்பிகைக்கும் பல லெட்ச ரூபாய் மதிப்புள்ள நகைகள், வாகனங்கள், எலக்டிரிக் தீபங்கள், திருக்குளத் திருப்பணிகள் செய்தும், சங்காபிஷேகம் முதலியனவும் செய்துவருவது போற்றத் தக்கதாகும். மேலும், அணி அண்ணுமலைத் திருப்பணி செய்து

கும்பாபிஷேகம் செய்தும், கிராமங்கள் வாங்கிவைத்தும் நல்ல முறையில் நடத்திவருவது போற்றுதற்குரியது. யாவற்றிற்கும் மேலாக, திருவண்ணுமலை அருணுசலேசுவார் கோவில் திருப்பணியும் மேன்மைதங்கிய மெ. க. குடும்பத்தார்கள் அனைவரும் பெரும் நிதி கொடுத்துப் பெருமுயற்சியால் திருப்பணி வேலைகள் சிறப்பாகச் செய்துமுடித்துக் கும்பாபிஷேகம் நடத்தியும், மறுபடியும் மறு கும்பாபிஷேகமும் செய்யப்பெற்றுள்ளது. மேன்மைதங்கிய மெ. க. குடும்பத்தார்கள் அனைவரின் பெரும் வள்ளல் தன்மையை நான் மிகவும் பாராட்டுகிறேன்.

ஆண்டுதோறும் நடக்கும் திருக்கார்த்திகையின்போது திருவண்ணுமலைக்குவரும் பல பெருமக்களுக்கு மிக்க உபசரிப்போடு மேன்மை தங்கிய மெ. க. குடும்பத்தார்களின் விடுதிகளில் செய்து வரும் விருந்துபசாரத்தை நாம் யாவரும் பாராட்டுகின்ருேம்.

இப்படிப் பலவாருகப் பெரும் நற்பணிகளை நூற்ருண்டுகளாகச் செய்துவரும் மேன்மை தங்கிய மெ. க. குடும்பத்தார்கள் எல்லோரும் இன்னும் பற்பல நல்ல பணிகள் செய்துவர வேணுமாயும், மேன்மை தங்கிய மெ. க. குடும்பத்தார்கள் எல்லோருக்கும் மேன்மேலும் எல்லா நலன்களும் உண்டாக வேணுமாயும் இறைவனைப் பிரார்த்திக்கின்றேன்.

தங்கள் அன்புள்ள,

மு. அ முத்தையா செட்டியார்

மேன்மை தங்கிய

## இராமனாத சேதுபதி அவர்கள்,

### இராமனாதபுரம் மன்னர்

''உண்ணாமுலை உமையாளொடும் உடனாகிய ஒருவன்'' திருமாலும் நான்முகனும் தேடியும் காணமுடியாத சோதிப் பிழம்பாய், நின்று, உலகுய்ய எழுந்தருளியிருக்கும் பஞ்சபூதத் தலங்களில், திருவண்ணாமலை தேயுத்தலமாகும். இத்தலம் சமயச் சிறப்பும் வரலாற்றுச் சிறப்பும் மிக்குடையது, நினைக்க முக்தி தருவது. ''அண்ணாமலை தொழுவார் வினை வழுவா வண்ணம் அறுமே'' என்று பாடுகிறார் சம்பந்தர்.

இத்திருத்தலத்திலே, கோட்டையூர் உயர்திரு மெ. க. குடும்பத்தார் நூறு ஆண்டுகளுக்கு முன் அன்னச்சத்திரம் அமைத்து, அடியார்களுக்கு அமுதளிக்கும் மிகச் சிறந்த சமயப்பணி செய்து வருவது போற்றுதற்குரிய செயலாகும். 'மண்ணினிற் பிறந்தார், பெறும்பய்யன் மதிசூடும் அண்ணலார் அடியார்தமை அமுது செய்வித்தல்'' என்கிறார் சேக்கிழார். சைவ சமயத்தின் உயர் தனிச் சிறப்புக்களில் ஒன்று அடியார்க்கு அமுது செய்வித்தல். சைவ நாயன்மார்களில் பலர் இத்தொண்டினை முட்டின்றிச் செய்து பேரின்பப் பெருவாழ் வடைந்தனர்.

சிவம்பெருக்கும் சீலர்களாய் வாழ்ந்துவரும் பேறு பெற்ற வர்கள் நகரத்தார் பெருமக்கள், அவர்கள் சமயத்திற்காகச் செய்திருக்கும் திருப்பணிகளும் அறச் செயல்களும் எண்ணில் அடங்கா. அத்தகைய குடும்பங்களில், கோட்டையூர் மெ. க. குடும்பமும்ஒன்று. இக் குடும்பத்தினரின் சமயப் பணிகளை நாடு அறியும்; வரலாற்று ஏடு அறியும். நூற்றுண்டுகள் தொடர்ந்து அடியார்க்கு அமுதளித்து வருகிறார்கள். ஏழைப்பிள்ளை களுக்கு இலவசமாக உணவும், உடையும், உறையுளும் புத்தகமும் அளித்து வருகிறார்கள்.

வேயுறு தோளிபங்கனுக்கு வெள்ளி ரிஷப வாகனம் செய்து வைத்து, ரிஷபவாகன மண்டபப்படியை இன்றளவும் சிறப்பாக நடத்தி வருகிறார்கள். அண்ணாமலையாரின் நித்திய அபிடேகத்திற்கு ஆவின்பால் அளித்து வ ரு கி று ர் க ள். அண்ணாமலையாருக்கும் உண்ணாமுலை நாயகிக்கும் பல லெட்ச ரூபாய் பெறுமான ஆபரணங்கள் வாகனங்கள்செய்துவைத்து, சங்காபிஷேகம் நடத்தி வருகிறார்கள். அண்ணாமலைத் திருப் பணியும் செய்து கும்பாபிஷேகமும் செய்திருக்கிறார்கள். மேற்கூறிய திருப்பணிகள் முட்டின்றி நடைபெற நிவந்தங் களும் ஏற்படுத்தியுள்ளார்கள்.

இத்தகைய சிறந்த சி வ ப் ப ணி க ள் செய்து வரும் அன்பரவர்கள் அன்ன சத்திரத்தின் நூற்றுண்டு விழாவைக் கொண்டாட ஏற்பாடு செய்தமை மிகவும் பொருத்த

முடையதே. மேலைத் தவத்தால் பெற்ற செல்வத்தின் பெரும் பகுதி இதுபோன்ற அறச் செயல்களுக்குச் செலவிடுவது அழியாப் புகழைத் தருவதாகும்.

''அன்றறிவாம் என்னது அறம் செய்க; மற்றது
பொன்றுங்கால் பொன்றுத் துணை.

அடியார்க்கு அமுதளிக்கும் அன்னச் சத்திரம் மேலும் மேலும் வளர்ச்சியுற்று, உலகுள்ளளவும் அயராது பணிசெய்து வர, அண்ணாமலையாரின் பொற்பாதக் கமலங்களை வணங்கி வாழ்த்துகின்றேன்.

வாழ்க சிவத்தொண்டு! வளர்க அன்னச் சத்திரம்!

இங்ஙனம்,
S. இராமநாதசேதுபதி
இராமநாதபுரம் ராஜா.







# திரு. கே. எஸ். நரசிம்மன்,

## பி. ஏ. பி. எல். ஐ. ஏ. எஸ்., அவர்கள் ஆணையாளர்,

## இந்துசமய அறநிலைய (ஆட்சி)த்துறை.

### சென்னை

"ஆடிப் பாடி அண்ணாமலை கைதொழ
ஓடிப்போம் நமது உள்ள வினைகளே"

திருவண்ணாமலையிலுள்ள மெ. க. அன்னச்சத்திரம், 28-11-1872-ல் தொடங்கப்பெற்று, இவ்வாண்டில் நூற்றாண்டு விழாக் கொண்டாட இருப்பது அறிந்து, மிகவும் மகிழ்ச்சி அடைகின்றேன். தன வணிகர் குலத்துப் பெருமக்கள், சைவ வளர்ச்சி சிவாலயங்களின் வளர்ச்சி குறித்து, ஆற்றியுள்ள அரும் பெரும் தொண்டுகள் அளவிடற்பாலன அல்ல. எத்தனையோ பல சிவாலயங்கள், அவர்களால் பல லட்ச ரூபாய்ச் செலவில், சிறந்த முறையில் திருப்பணிகள் செய்யப்பெற்று விளங்கி வருகின்றன.

அத்தகைய தரும சிந்தைமிக்க, தங்கள் குடும்பத்து முன்னோர்கள் அமைத்த அன்னச்சத்திரம், சென்ற நூற்றாண்டு காலமாக நிலைபெற்று, அறச் செயல்கள் பல புரிந்து வருவது பெரிதும் போற்றுதற் குரியதாகும்.

நாள்தோறும் அண்ணாமலையார் அபிடேகத்திற்குப் பால் கொடுத்து வருவதும், ஆண்டுதோறும் வெள்ளி ரிஷப வாகன மண்டபப்படியைச் சிறப்பாக நடத்தி வருவதும், விலை மதிப்புமிக்க அணிகலங்கள் வாகனங்கள் மின் விளக்குகள் அளித்து திருக்





குளத் திருப்பணிகள் செய்து சங்காபிஷேகம் முதலியன நடத்தி வருவதும் ஆகிய தங்கள் குடும்பத்தாரின் தொண்டுகள், பெரிதும் புகழ்ந்து போற்றிப் பாராட்டுதற்குரியன என்பதில் ஐயமில்லை.

அவ்வப்போது அருணசலேசுவரர் கோயிலுக்குத் திருப் பணிகள் செய்ததுடன், இருமுறை கும்பாபிஷேகங்கள் நடத்தி வைத்திருப்பதும், தோன்றிய காலந்தொட்டு இன்றுவரை இவ் வன்னச்சத்திரத்தில் விழாக் காலங்களில் வெளியூர்களிலிருந்து வரும் அடியார்களுக்கு உணவு அளித்து வருவதும், சிறந்த அறச் செயல்களாய் அனைவரும் போற்றுதற்குரியனவாகும். ஏழைப் பிள்ளைகளுக்கு இலவசமாக உணவு உடை உறையுள் புத்தகங்கள் வழங்கி வரும் இந்தச் சத்திரத்தின் செயலை, எவ்வளவு புகந்து போற்றினுலும் தகும்.

இவ்வாறு பல அறச் செயல்களைச் செய்துவரச் தக்க நிலையில், தங்கள் குடும்பத்து முன்னேர்கள் அமைத்துவைத்த இவ் அன்னச்சத்திரத்தின் நூற்ருண்டுவிழா, மிகச் சிறப்பாக நடைபெற விரும்புவதுடன், இத்தகைய நூற்ருண்டுவிழாக்கள் எண்ணில்லாத பலவற்றை மேலும் மிகக் கொண்டாடும் வகையில், நீடித்து நிலை பெற்று வளர்ந்தோங்குதல் வேண்டுமென்று, எல்லாம்வல்ல உண்ணமுலை உடனுறை அண்ணமலை அண்ணலின் திருவருளைச் சிந்தித்து வந்தித்து, என் அன்பார்ந்த வாழ்த்துக் களைத் தெரிவித்துக்கொள்ளுகின்றேன்.

தங்கள் உண்மையுள்ள

**கே. எஸ். நரசிம்மன்**

# திரு. ம.அ. முருகேசன், பி.ஏ., பி.எல். அவர்கள்

## துணை ஆணையாளர்,

## இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை

### மதுரை.

மெ- க. அன்னச்சத்திரத்தின் நூற்றாண்டுவிழா, அண்ணல் அண்ணாமலையாரின் கார்த்திகைப் பெருவிழாவுடன் நடைபெறுவ தாக அறிந்து மிக்க மகிழ்ச்சி அடைகின்றேன். ஷெ அன்ன சத்திரம் 28 – 11 – 1872இல் துவங்கியதாகவும் அன்றுமுதல் இன்று வரை நன்கு வளர்ந்து நற்பணி செய்து வருவதாகவும் அறிகிறேன். சில்லாண்டிற் சிதையும் நிறுவனங்கள்போல் அல் லாமல் பல்லாண்டுகளாகப் பணிபுரியும் இந்தச் சத்திரத்தை இறை யருள் நின்றுகாக்க அண்ணாமலை அண்ணலின் பாதமலர்களை நினைத்து வழுத்துகிறேன்.

மெ க. குடும்பத்தார்களின் நன்கொடைகளையும் அறப்பணி களையும். தமிழகம் அறியும். உண்ணாமுலை உடனாகிய அண்ணா மலையாரின் கார்த்திகைத் திருவிழாவில் 5-ஆம் திருநாள் ரிடப வாகனக் கட்டளையை அவர்கள் சிறப்புறச் செய்கிறார்கள். திருக்குளத் திருப்பணியிலும் குடமுழுக்கு விழாவிலும் இக்குடும்பத் தினரின் பங்கு பெரும் பங்கு என அறிகிறேன். திருவண்ணாமலை ஆலயத்தைச் சேர்ந்த அத்துணை திருப்பணிகளிலும் இக்குடும்பத் தினர், பெரும் பங்கு கொண்டு பணியாற்றி இருக்கிறார்கள் என்பது பாராட்டுதலுக்குரிய செய்தி. முன்பு வேத பாடசாலையும் பின்னர், ஏழைக் குழந்தைகளுக்கு உண்டி, உடை, உறையுளும் அளித்து அறம் வளர்த்து வரும் இந்த அன்னச்சத்திரம் ஆயிரம் ஆண்டு வாழ்ந்து நற்பணி புரியவும், அதை நடத்தி வரும் மெ. க. குடும்பத்தினருக்கு இறையருள் பெருகவும் அண்ணல் அண்ணாமலையாரின் திருவருளைச் சிந்தித்து வாழ்த்துகிறேன்.

ம. அ. முருகேசன்





# திரு. T. V.

# விசுவநாத அய்யர் அவர்கள்

திரு. அண்ணாமலை, புராணகால முதற்கொண்டே மிகுந்த பிரசித்திபெற்ற நகரம். பஞ்சபூத க்ஷேத்திரங்களில் ஒன்ருன 'தேயு' க்ஷேத்திரமாகும். இறைவனின் ஜோதி வடிவை விளக்கு வதற்கே இங்குள்ள மலைமீது கார்த்திகைத்தீபம் ஏற்றிக் கொண்டாடப்படுகின்றது. இந்த ஸ்தலம் சம்பந்தர், அப்பர் இருவராலும் தேவாரம் பாடப்பெற்ற சிறப்புடையது. ஸ்ரீ மாணிக்க வாசகர் திருவெம்பாவை அருளியதும் இந்த ஸ்தலத்தில்தான். லிங்கோத்பவமூர்த்தியின் தத்துவம் எல்லாரும் அறிந்ததே. திருமாலும், பிரமனும் சிவபெருமானின் அடியையும் முடியையும் தேடிக்காண இயலாத மலை என்பதன் காரணமாகவே அண்ணு (அணுக முடியாத)என்ற பெயர் இத்தலத்துக்கு ஏற்பட்டதாகக் கூறுவார்கள். திருப்புகழ் அமுதத்தை உலகுக்கு வாரி வழங்கிய ஸ்ரீ அருணகிரிநாத ஸ்வாமிகளுக்கு முருகப்பெருமான் உபதேசம் புரிந்தருளியது இங்கேதான். பல சித்த புருஷர்களும் மகான்களும் இங்கு இருந்தது யாவரும் அறிந்த விஷயமே. சமீபகாலத்தில் ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள், ஸ்ரீ ரமணபகவான் முதலிய பெரியோர் தங்கித் தவஞ்செய்து உண்மை ஞானதத்துவத்தை உலகத் தோருக்கு உணர்த்திய புண்ணிய ஸ்தலமும் இதுவே.

கண்ணாரக் காணும் கடவுளாக விளங்கும் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் 1972-ஆம் வருஷம் தீப விழாவிற்கு இங்கே எழுந்தருளி இத்தலத்தை வழிபட்டு ஒரு மாதத்திற்குமேல் தங்கி, பலமுறை கிரியை வலம் வந்து,இந்த ஸ்தலத்தின் பெருமைகளையும் ஸ்ரீ அருணசலேஸ்வரர் மகிமையையும், நகரத்தார்களும் பிறரும் வேதத்திற்கும் ஆலயங் களுக்கும், சநாதன தர்மத்திற்கும் ஆற்றிவரும் மகத்தான

தொண்டையும், தர்ம காரியங்களைப்பற்றியும் அருளி நம் எல்லோரையும் உற்சாகப்படுத்தி கிருதார்த்தராக்கி அனுக்ரகித்துள்ளனர்.

"இன்ன றுங்கனிச் சோலைகள் செய்தல்
இனிய நீர்த்தண் சுனைக ளியற்றல்
அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல்
ஆல யம்பதி னாயிரம் நாட்டல்
பின்ன ருள்ள தருமங்கள் யாவும்
பெயர் விளங்கி ஒளிர நிறுத்தல்
அன்ன யாவினும் புண்ணியம் கோடி
ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தல்"

என்று கல்வியின் சிறப்பைக் கூறவந்த மகாகவி பாரதியார் பாடியுள்ளார். எல்லாத் தானங்களிலுமே கல்வித்தானம் சிறந்தது என்று வலியுறுத்தச் சிறந்த பிரதானங்களாக அவர் கூறியுள்ளவற்றில் நிழல்தரும் பூங்கா அமைத்தல், குளம் வெட்டுதல், அன்னசத்திரம் வைத்தல் கோயில் கட்டுதல் இந்தத் தருமங்கள் பல்லாண்டு பல்லாண்டு நிலைநிறுத்தல் ஆகியவை ஆகும்.

இந்தச் சிறந்த தர்மங்களை எல்லாம் அருணையம்பதியில் திரு. மெ. க. குடும்பத்தினர்கள் செய்து வருகின்றார்கள். இக்குடும்பத்தினர் நடத்திவரும் திருப்பணிகளில், கும்பாபிஷேகம் செய்வதும் தினந்தோறும் அபிஷேகத்திற்குப் பால் கொடுத்து உதவுவதும், கார்த்திகைத் தீபப் பெருவிழாவில் ஐத்தாம் திருநாள் ரிஷப வாகன மண்டபப்படியைச் சிறப்பாக நடத்துவதும், வேத பாடசாலை நடத்துவதும் ஏழைப் பிள்ளைகளுக்குக் கல்விகற்க உதவுவதும் இலவச உணவு அளிப்பதும் மிகவும் போற்றத் தக்கனவாம்.

நூறு ஆண்டுகளுக்குமுன் 28—11—1872-ல் தொடங்கி இதுகாறும் சிறப்பாக நடந்துவரும் அன்னச்சத்திரத்தின் முதல் நூற்றாண்டு விழா இத்த வருஷம் கார்த்திகைத் திருவிழா 5-ஆம்

நாள் விழாவன்று 15—11—1972-இல் கொண்டாடவிருக்கின்றது. தானங்களில் சிறந்த அன்னதானம், வித்யாதானம் இரண்டையும், நூறு வருஷங்களாக இடையறுது நடத்தி வருவது மிகவும் மெச்சத்தக்கதாகும்.

இவ்வாறு நீடித்துச் சீரிய அறப்பணி புரிந்துவரும் மெ. க. அன்னச்சத்திரமும் அந்தக் குடும்பத்தினர் ஆற்றிவரும் பிற அறப் பணிகளும் மேலும் மேலும் ஓங்கி வளர்ந்து, நாட்டில் ஆஸ்திகத்தையும், தர்மத்தையும் ஆலய வழிபாட்டையும் தார்மீக வாழ்வையும் தழைத்தோங்கச் செய்ய எல்லாம்வல்ல அண்ணுமலையான் அடிக்கமலங்களைப் பணிந்து பிரார்த்திப்போமாக

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயவெல் லாம் அரன்நாமமே
சூழ்க வையகமுந் துயர் தீர்கவே.

**I. V. VISWANATHA IYER.**





## திரு. சை. வே. சிட்டிபாபு, எம். ஏ. பிடி அவர்கள்

*பள்ளிக் கல்வி இயக்குநர்*

**சென்னை**

மெ. க. அன்னச்சத்திரம் நூற்றுண்டு நிறைவு விழாவினை இன்னும் சில நாட்களில் காண இருக்கிறது என்பதை எண்ணி மட்டற்ற மகிழ்ச்சி பெறுகிறேன். கல்விப்பணியிலும், அறப்பணியிலும் சிறந்து விளங்கும் நகரத்தார் சமூகத்தினர் வரலாற்றிலே நிலையான புகழ் எய்தியுள்ளனர். அவர்கள் திருத்தொண்டு மற்றவர் களுக்கு வழிகாட்டி என்பதை நாடறியும்; தமிழ்கூறும் நல்லுலகம் உணரும். சங்கத் தமிழ் கண்ட கொடைப் பணியை இந்நாள் வரை செவ்வனே தொடர்ந்து ஆற்றி ஈத்துவக்கும் இன்பத்திலே அடக்கத்தோடு திளைக் கின்றவர்கள் மெ. க. அன்னச்சத்திரத்தார்.

"உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே" என்ற பழந்தமிழ் வாக்கினை, செயல்வடிவம் கண்ட பெருமை தங்கள் மூதாதையர்களைச் சேரும். உண்ட வயிறு வாழ்த்தும். "பசி வந்திடப் பத்தும் பறந்து போம்"

என்பதை உணர்ந்து, அதை நீக்க எடுத்த முயற்சிக்கு நாடும், ஏடும் நன்றி சொல்லும். நல்லவர்கள் வாழ்த்து கிருர்கள். இனியும் வாழ்த்திக்கொண்டே இருப்பர்.

பசியைத் தீர்த்த "அமுதசுரபியென'! தங்கள் அன்னச் சத்திரம் மேன்மேலும் வளரட்டும். "பசிப்பிணி மருத்துவன்" என்ற புகழினைத் தொடர்ந்து பெறட்டும். உண்ட வயிறுகள் வாழ்த்தட்டும். தாயினும் நினைந்து சாலப்பரித்து பாராட்டும் பெருமை கிடைக்கட்டும். இது மட்டுமல்ல. ஏழைப்பிள்ளைகளுக்கு உணவோடு, உடுக்க உடையும் இருக்க இடமும், படிக்க நூலும் கொடுத்து வரும் தங்களது பாங்கினை மனதாரப் பாராட்டுகிறேன். தாங்கள், செய்துவரும் அன்புப்பணி, அறப்பணி, தெய்வீகப்பணி மற்றவர்களுக்கு வழிகாட்டும் ஒரு அமரதீபமென ஒளிரட்டும்.

அன்புள்ள,

சை. வே. சிட்டிபாபு







கலைத்தந்தை

# திரு. கரு. முத்து.

# தியாகராசன் செட்டியார் அவர்கள்

## மதுரை.

"உண்ணாமுலை உமையாளொடும் உடனாகிய ஒருவன்" வீற்றிருந்து, பேரருள் சுரக்கும் அண்ணாமலை, இறைவன் திருத்தலங்களுள் தலைசிறந்ததாகும். "பிறவா யாக்கைப் பெரியோ"னாகிய சிவபெருமான் ஒளிவடிவாகக் காட்சி தந்தருளும் இத்திருப்பதியில், பத்திச் சுவை சொட்டுந் திருப்புகழ் பாடிய அருணகிரியாரும், குழவிப் பருவத்தில் அழலுருவன் வழி நின்ற இரமண அடிகளும் வாழ்ந்து மன்பதை உய்திக்கு நன்னெறி புகட்டிப் போந்தனர்.

நினைத்த அளவில் அவமாம் பவம் கெடுத்து முத்தி தரும் திருவண்ணாமலையில், நாட்டுக்கோட்டை நகரத்தார் மரபினர் சொல்லரும் திருப்பணிகள் பல புரிந்து சிறப்புற்றுள்ளனர். அந்நன் மரபில் தோன்றிய கோட்டையூர் மெ. க. குடும்பத்தினர், அண்ணாமலையார் திருக்கோயிற்குப் பண்ணார், செம்பொன் மணி அணி நல்கியும் திருப்பணி, திருக்குளங்கள் செய்தும் அன்னச்சத்திரம் அமைத்தும் இறைத்தொண்டாற்றி இன்புற்றிருக்கின்றனர்.

இறைப்பணிகளுள் மிகச் சிறந்தது மன்பதை பசிப் பிணி போக்கும் நல்லறமே என்பதை நம்முன்னோர் இனிதறிந்து ஒழுகினர். "உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே" என்னும் சங்க இலக்கிய வழி நின்று,





நலிந்தோர் பசிப்பிணி மருத்துவராய் அவர்கள் விளங்கினர். அதிலும் சிறப்பாக, இறைவன் அருள்வேண்டி, திருவிழாக்கள் காண வரும் அன்பர்களுக்கு வரையாது அன்னம் வழங்கும் அறத்தை அவர்கள் போற்றி வளர்த்தனர்.

பழந்தமிழ்ச் சான்றோரின் மரபுவழி நின்று, நாட்டுக்கோட்டை நகரத்தார் பெருமக்கள் இறைவன் திருக்கோயில் கொண்டருளும் தலங்கள் அனைத்திலும் அன்னதான மடங்கள் அமைத்து, அவற்றை வாழையடி வாழையாக வளர்த்து, இனிதே நடத்தி வருகின்றனர். அத்தகைய மடங்களுள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது அண்ணாமலையார் அருள்வழி நின்றியங்கும் மெ. க. குடும்பத்தார் அமைத்து நலமே நடத்திவரும் அன்னச் சத்திரமாகும். இற்றைக்கு நூற்றாண்டுகட்டு முன்னர், ஊருணி நீர் நிறைந்தாற் போன்று புகழ் சிறந்து, வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்துவரும் அக்குடும்பத்தினரின் அறப்பெருக்கால் அமைந்த இச்சத்திரம், அன்று தொடங்கி இன்றுவரை, அன்பர் பணி செய்து அறக் கொடையில் சிறந்து விளங்கி வருகிறது.

கங்கையும் காவிரியும் போன்று வரையாது அன்னம் பாலித்து,ஆண்டவன் அடியவரின் அழிபசி மாற்றி, அறம் வளர்த்து வரும் இத்திருமடம் தனது நற்பணியின் நூற்றாண்டு நிறைவை இன்று விழாவாக எடுத்து இன்புறுகின்றது. நூற்றாண்டு விழா இனிதே நிகழ்ந்தேறவும், அன்னச்சத்திரம் மேன்மேலும் தொடர்ந்து வளர்ந்து தனது அறப்பணியில் சிறப்புற்றோங்கவும், மெ. க. குடும்பத்தினர் எல்லா நலங்களும் சான்று இன்புறவும் அண்ணாமலை அண்ணல் திருவருள் புரிவாராக.

**கருமுத்து தியாகராசன்.**

# திருமதி. சந்திரகாந்தி
# கோவிந்தராஜலு அவர்கள்
### பீளமேடு - கோயமுத்தூர்,

இல்லார்க்கு என்றது எல்லார்க்கும் என்றுங்கு, இனிதே அன்னம் அளித்து, ஏற்றம் பெற்று, தங்களின் முன்னோர்களின் உளத்திற்கும் வளத்திற்கும் சான்றாய், அன்றால் தொடங்கப் பெற்று, இதுநாள்வரை இயங்கி வரும் திருவண்ணாமலைத் திருத்தலத்தில் அமைந்த மெ. க. அன்னச் சத்திரத்தின் முடிவிலா வளர்ச்சியை அண்மையில் நிகழ இருக்கும் அதன் நூற்றாண்டு விழாவே நவிலா நிற்கும்.

பழுமரம் நாடும் பறவையெனப் பலரும் நாடிவரும் தெய்வத் திருநகரில் அமைந்த இச்சத்திரத்தின் நிலைப் புக்கு நிலையாக நின்றார் அனைவரும் உண்டி கொடுத் தலின் உயிர் கொடுத்தாரே.

சைவப்பணியும் தமிழ்ப்பணியும் கோயிற்பணியும் கொடைப்பணியும் குறைவின்றி வளர்ந்துவரும் உங் களது முன்னோர் முயற்சியால் வாடாது வளரும் தங்கள் அன்னச் சத்திரம் பசிப்பிணி நீக்கும் மருத்துவ மனையாய், நாட்டின் நல்லிரக்கத்திற்குச் சான்றாய் நாளும் மேலும் நனி உயர, அண்ணாமலையான் அடிபணிவோம்.

நல்லவர் உள்ளம் போல்
நல்லறப் பயனைப் போல்
அண்ணாமலையான் அருளைப் போல்
அண்ணாமலைவளர் அன்ன சத்திரம்
அகிலத்தே மிகச் சிறப்போடு பொலிவதாக!

சந்திரகாந்தி கோவிந்தராஜுலு
பீளமேடு, கோயமுத்தூர்.



முன்னாள் தமிழ்நாடு முதல்அமைச்சர்

## திரு. கு. காமராஜ் அவர்கள்

சென்னை.

மெ. க. அன்னச்சத்திரத்தின் நூற்றாண்டு நிறைவு விழாவை யொட்டிச் சிறப்பு மலர் வெளியிடுவது அறிந்து மகிழ்ச்சி.

மலர் சிறப்புற அமைய என் நல்வாழ்த்துக்கள்

தங்கள் அன்புள்ள

**கு. காமராஜ்**

முன்னாள் தமிழ்நாடு முதல்அமைச்சர்

## திரு எம். பக்தவத்ஸலம் அவர்கள்

### சென்னை.

நூறு ஆண்டுகளாக அன்னமளித்து வரும், தங்களது மெ. க. அன்னசத்திரத்தின் நூற்றாண்டு விழாவைத் தாங்கள் பெருமையுடன் கொண்டாட ஏற்பாடு செய்திருக்கிறீர்கள். தங்கள் முன்னோர்கள் வைத்த இந்தத் தர்மத்தில் தாங்களும், தங்களைச் சார்ந்தவர்களும் இவ்வளவு அக்கறை காட்டி வருவது மகிழ்ச்சிக்கும், பாராட்டுக்கும் உரியது.

விழா இனிது நடைபெற எனது நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்

அன்புள்ள,

**எம். பக்தவத்ஸலம்**



சிலம்புச் செல்வர்

## திரு. ம. பொ. சிவஞானம் அவர்கள்

துணைத் தலைவர்

தமிழ் நாடு சட்டமன்றம், சென்னை.

வணக்கம். மெ. க. அன்னச் சத்திரத்தின் நூற்றாண்டு விழா நடைபெறுவது அறிந்து மகிழ்ச்சியடைகிறேன். ஒரு அன்னச் சத்திரம் நூறு ஆண்டுக் காலம் நடந்தது என்றால், வழிவழியே அதனை நடத்தி வந்தவர்களை வாழ்த்தத்தான் வேண்டும். வாழ்த்துகிறேன்.

விழாச் சிறப்புற நடைபெற இறையருளை வேண்டுகிறேன்.

அன்புள்ள,

**ம. பொ. சிவஞானம்.**



கம்பன் அடிப்பொடி

# திரு, சா. கணேசன், M. L. C. அவர்கள்

காரைக்குடி.

சைவப் பெருமக்கட்குச் சிறந்த தலங்கள் சில வற்றுள் திருவண்ணாமலை ஒன்று. அறவோரும், துறவோரும், ஆன்றோரும், சான்றோரும், முனிவர்களும், ஞானியரும், பன்னூறு ஆண்டுகள் நின்றும், இருந்தும் கிடந்தும், உருண்டும் வழிபட்ட புனிதத் திருத்தலம் அண்ணாமலை. பேரொளிப் பிழம்பாய்ப் பிறங்கு மலை. உயரத்தில் மிக்க கோபுரமும், ஆழத்தில் மிக்க திருக்குளமும் அண்ணாமலையில்தான் உண்டு.

அத்தகு புண்ணியத் தலத்தில் நாட்டுக்கோட்டை நகரத்தார் பெரிதும் ஈடுபாடுகொண்டவர்கள். எண்ணற்ற அறக்கட்டளைகளை ஆக்கி, அவற்றைக் கண்ணெனப் போற்றிப் பேணிக்காத்துவரும் அருமையை நாடேத்தும்; நல்லோர் புகழ்வர்.

கோட்டையூர் மெ. க. குடும்பத்தார்கள் அமைத்துப் புரந்துவரும் அன்னசத்திரம் தனது நூற்றாண்டு விழாவைக் கொண்டாடும் பேற்றைப் பெற்றுள்ளது. அன்னசத்திரத்தை அமைத்த அந்தப் புண்ணிய சீலர்கள் பண்ணிய அறங்கள் பற்பல இன்றும் பயன் கொழிக்கக் காணுகிறோம். மகாதேவனுக்கு இவர்கள் சமர்ப்பித்த மகாரிஷபம் அதற்கு மேலே கவித்து நிற்கும் மகாப் பெருங்குடை இரண்டும் அருணைக் கோபுரத்தைப் போலவே ஈடும் இணையும் அற்றவை.

எத்தனையோ லட்சக்கணக்கில் செலவிட்டுத் திருவாபரணங்கள் திருப்பணிகள் எல்லாம் செய்து அவை என்றும் நின்று பயன் சுரக்க வழிவகைகளையும் ஆற்றியுள்ள முன்னோர்களையும், அவற்றைப் பெரிதும் பேணிக்காத்து நலம் புரிந்துவரும் அவர்களின் சந்ததியாரையும் எத்துணைப் பாராட்டினாலும் தகும்.

நூற்றாண்டு விழாவைக் கொண்டாடும் மெ. க. அன்னசத்திரமும், அதன் தொடர்பான பிற பணிகளும் என்றும் நின்று நிலவி நன்று பயன் சுரக்க அண்ணாமலை அண்ணல் திருவருள் புரிக என மனமார, வாய்மணக்க வாழ்த்தி மகிழ்வோமாக!

மெ. க. குடும்பத்தினர் மேலும் மேலும் வளம்பெற்று இன்னும் பற்பல அறங்களை ஆக்கியும், வளர்த்தும், காத்தும் நலம்புரிய உண்ணாமுலை உமையாளொடும் உடனாகிய அண்ணாமலை அப்பன் அருள்புரிவானாக!

அன்பன்

கம்பன் அறநிலை | கம்பன் அடிப்பொடி

காரைக்குடி. | (சா. கணேசன்)





இராமேசுரம் தேவஸ்தானப் பரம்பரை டிரஸ்டியும்
காசி நாட்டுக்கோட்டை நகரச் சத்திர
மானேஜிங் சொசைட்டித் தலைவருமான

# திரு. அழ. அரு. சோமனாதன் செட்டியார் அவர்கள்

## தேவகோட்டை.

திருவண்ணாமலையில் மெ. க. குடும்பத்தாரால் நிறுவப்பெற்றுச் சிறப்பாக நடைபெற்று வருகின்ற அன்னச் சத்திரத்தின் நூற்றுவது ஆண்டு நிறைவுவிழா 15—11—1972 ஆம் நாளன்று நடைபெறவிருக்கிற செய்தி மிக்க மகிழ்ச்சியைத் தருகின்றது. நமது நகரத்தார் பெருமக்கள் மதத்துக்கும் ஏழை மக்களுக்கும் பல அற நிலையங்களை நிறுவி ஏராளமான தொண்டுகள் செய்துள்ளார்கள். இன்னும் செய்து வருகின்றார்கள். முற்காலத்தில் கோவில்களும் அன்னச்சத்திரங்களும் பல நிறுவினார்கள். இக்காலத்திலும் காலத்திற்கேற்ப; பல கல்வி நிலையங்களும் மருத்துவ நிலையங்களும் ஏராளமான பொருட் செலவில் நிறுவியுள்ளார்கள். உங்கள் முன்னோர்கள் காலத்தில் திருவருணையில் ஸ்ரீ அண்ணாமலையார் ஸ்ரீ உண்ணாமுலையம்மை திருக் கோவிலில் திருப்பணியும் வாகனாதி ஆபரணங்கள் பல லெட்சக்கணக்கான பொருள் செலவழித்துச் செய்தும் வைத்திருப்பதோடு மக்களுக்குப் பசிப்பிணி தீர அன்னச்





சத்திரமும் அமைத்தனர். அவைகளை அவர்கள் சந்ததியினர் விடாது தொடர்ந்து நல்லமுறையில்நடத்தி வருகின்றனர். அதோடு மட்டுமல்லாமல் அந்தப் பரம்பரையினர் பலரால் பெரும் பொருள் செலவில் கல்வி நிலையங்கள், மருத்துவ நிலையங்கள் பல நிறுவப் பெற்றுச் சீரிய முறையில் பல்லாயிரக்கணக்கான மக்கள் பயனடைந்து வருகிறார்கள். அவைகள் மிகவும் பாராட்டத் தக்கனவாம். முன்னோர்கள் நிறுவிய தர்ம நிலையத்தின் நூறாவது ஆண்டு நிறைவு விழா சிறப்பாக நடைபெறவும் அன்னச்சத்திரத்திற்கு இன்னும் பல நூற்றாண்டுவிழா நடைபெறவும் ஸ்ரீ பர்வதவர்த்தினி அம்பாள் சமேத ஸ்ரீ இராமநாத சுவாமியையும் ஸ்ரீ விசாலாட்சியம்பாள் சமேத ஸ்ரீ காசிவிசுவநாத சுவாமியையும் இதயபூர்வமாகப் பிரார்த்திக்கின்றேன். மெ. க. சந்ததியார் இன்னும் பல்லாண்டு காலம் சுகமாக வாழ்ந்து நலம் பல புரிந்துவர எனது மனமார்ந்த வாழ்த்துக்கள் உரித்தாகுக.

அள அரு. சோமநாதன்

அண்ணாமலையார் திருக்கோவிலின் முன்னாள்
அறங்காவலர்

# திரு. டி. வி. சுப்பிரமணியன் செட்டியார் அவர்கள்

## திருவண்ணாமலை

மெ. க. அன்னச்சத்திரத்தின் நூற்றாண்டுவிழா, அன்பர்களுக்கெல்லாம் பக்தியையும் பரவசத்தையும் உண்டாக்குகின்றது. அன்று முதல் இன்றுவரை, திருவண்ணாமலைத் திருநகரில், இதற்கு நிகரான ஒரு மாபெரும் கட்டிடத்தை வகுத்தவர்கள், யாவருமிலர். முதலாவது, அன்னச்சத்திரத்திற்கு இடந்தேடிய பெரு மக்களின் எண்ணத்தின் விசாலம், எண்ணுவோர் எண்ணத்தை இன்பமயமாக்குகின்றது. எழுந்தவுடன், கதிரவனை நோக்கத்தக்க கிழக்குமுகம்; எந்த வீதிக்கும் அமையாத பெருவிசாலமான வீதி; வீதி அகலமும் போதாதென, மிகவிசாலமாக முன்னிடம்விட்டுக் கட்டிய மிகப் பெரிய முகப்பு; சாலைக்கேற்ற சோலை.

திருமகளின் உறைவிடமெனக் கருதத்தக்கதும், மிக நுண்ணிய வேலைப்பாடுகள் நிறைந்ததுமான, அரிய பெரிய நிலைகள் மூன்றும், நாட்டுக்கோட்டை நகரத்தவர்களின் நகரத்திற்கும் நாணயத்திற்கும், கொடைக்கும், குணமணங்களுக்கும், எடுத்துக் காட்டாக இலங்கு கின்றன.

இம்மாபெரும் கட்டிடத்தை, தானத்திற் சிறந்த அன்னதானத்திற்காகவே, மானத்திற் சிறந்த மாபெருந் தருமவான்களாகிய, கோட்டையூர் மெ. க. விலாசத்துக்குரிய வணங்கத்தகுந்த பெரியவர்கள் வகுத்து வைத்தார்கள். அண்ணுமலையண்ணலைப் போற்றிப் பூசிக்கும், அன்பர்களுக்காக இதைக் கட்டிவைத்தார்கள். நாடோறும் விழாக்கள்தோறும் குன்ருத கோதற்ற அன்னதானமும் நடத்தி வந்துள்ளார்கள். இதுநிலை பேருக நடந்துவருவதற்கு, வளமான வயல் வெளிகளேயும் வாங்கி அமைத்து வைத்துள்ளார்கள்.

நகரப் பெருமக்கள், பொதுவாக அடக்கத்தில் மிகச் சிறந்தவர்கள்; விளம்பரத்தில் விருப்பமில்லாதவர்கள்; பிறக்கும் பொழுது கொடுவராத, இடைநடுவே குறிக்கின்ற, கூடுகின்ற, இச்செல்வத்தைத் தந்த தயாபரன் யாரோ! அவனுல் நாம் மெச்சப்பட வேண்டும், ஏனையர் மெச்சுதலில் என்ன பயன்? என்ற நிறைவாகிய நினைவை உடையவர்கள். இவர்கள் நிறைகுணத்திற்கும், நம்பகத்திற்கும், தக்கவண்ணமே, அண்ணுமலையப்பனும் இவர்களேக் காத்தளித்து வருகின்ருன். திருவண்ணுமலையிலும் சுற்றுப்புறங்களிலுமுள்ள பெருமக்கள் அனைவருமே, அண்ணுமலையாரையும் நகரப் பெருமக்களேயும் பிரிக்கமுடியாத தொடர்புடையவர்களாகக் கருதுகின்ருேம். உண்ணுமுலையுமையாளொடும் உடனுகிய நமது அண்ணுமலையண்ணல் பேரருட் பெருக்கினுல், தனவைசியப் பெருமக்கள் அனைவரும் கலியின் கறை

படியாமல், பொருளும் அருளும் பொலிந்தோங்க, வாழ வேண்டும். நகரப் பெருமக்கள் அனைவரையும் ஆண்டாண்டாக நடந்து வரும் வழக்கப்படியே, எங்கள் கோட்டையூர் மெ. க. விலாசப் பெருமக்கள் அண்ணாமலைக்கு அழைத்துவந்து முன்னின்று தெரிசனம் சேவித்து, தாமும் தமது குடும்பமும், ஆல்போல் தழைத்து வாழவேண்டும். இதுபோலவே இந்தஅன்னச் சத்திரம் திருவோங்க, திறமோங்கப் பல்லாண்டுகண்டு, பக்தர்களுக்கு இடங் கொடுத்து வாழ வேண்டும் என மனமார வாழ்த்துகின்றேன்.

"அண்ணாமலையெம் அண்ணா போற்றி
கண்ணார் அமுதக் கடலே போற்றி"

இங்ஙனம்,

T. V. சுப்பிரமணியன் செட்டியார்,
முன்னாள் அறங்காவலர்,
திருவண்ணாமலை.



## முன்னாள் ஸ்ரீ அருணாசலீசுவரர் தேவஸ்தான அறங்காவலர்

### திருவண்ணாமலை

திருவண்ணாமலை மெ. க. அன்னச்சத்திரம் என்ற பெயர் தமிழகமெங்கிலும், யாவரும் அறிந்த பெயராகும். கார்த்திகைப் பெருவிழாவில் நாள்தோறும் வருகின்ற பற்பல யாத்ரீகர்களுக்கு உண்ண உணவளித்து வரும் சிறப்பு அன்னச்சத்திரத்தைச் சாரும். நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் பெருங்குணசீலத்திற்கு மேற்கூறிய உணவளிப்பு, கொடைக்குணக்குன்றமாகத் திகழ்கின்றது. மெ. க. ச. வைச் சார்ந்த செட்டியார்கள் திருவண்ணாமலையார் ஆலயத்திற்குப் பெரியதோர் அளவில் வெள்ளி, தங்க, வைர ஆபரணங்கள் விமானங்கள் வாகனங்கள் செய்தளித்தும், ஆதி அருணாசலம் கோவில் திருப்பணிகள் புரிந்தும், நாடோறும் அபிஷேகத்திற்குப் பால் தந்தும் வரும் செய்தி நாட்டவர் கேட்டுப் பேரானந்தத்தில் திளைத்தற்கு உரியவையாகும். கார்த்திகை 5-ஆம் நாள் வெள்ளி ரிஷப வாகனக் காட்சித் திருநாளை ஆண்டுதோறும் மிகச் சிறப்புற நடத்திவரும் பெருமை மேற்குறிப்பிட்ட சத்திரத்தையே சாரும். பண்டு. தங்கள் குடும்பத்தினர் திரு அண்ணாமலையார் கோவில் குடமுழக்கு விழாவினைப் பெருநோக்கில் முன்னின்று நிகழ்த்தி வைத்ததைப் போல், மீண்டும் வருகின்ற குடமுழக்கு விழாவிலும்

தங்கள் குடும்பத்தினர்கள் இடையருத பேரன்பு கொண்டு ஆவன செய்ய வேண்டுகின்றேன். நூருண்டுகள் நிறைவெய்தும் மெ. க. சத்திரம் மேலும் தன் னிறைவில் குன்ருமல் ஒளிர்வதாக! அறம் செழிப்பதாக! மெ. க. சத்திரத்தைச் சார்ந்த அனைவரும் நீடுவாழ எல்லாம் வல்ல உண்ணுமுலை உமையாளொடும் உடனுகிய ஸ்ரீ அண்ணுமலைப் பெருமானை வழுத்துகின்றேன்.

**S. S. V. S. Muthiachettiar**



# திரு. வைத்திய சுப்பிரமணியம் அவர்கள் பி. ஏ.

சென்னை.

திருவண்ணமலையில் இருக்கும் மெ. க. அன்ன சத்திரம் 100 ஆண்டுகள் பணிகள் பல புரிந்து நூற்ருண்டு விழாக்கொணடாட இருப்பதை அறிந்து மிகவும் சந்தோஷப்படுகிறேன்.

பண்டை நாட்களில் மகாராஜாக்கள் கோவில் திருப்பணியும் செய்து வேதரக்ஷணமும் செய்து வந்தார்கள். அப்படி ராஜ்யங்கள் அழிந்து பிரிட்டிஷ் அரசாங்கம் வந்த நிலைமையில், தர்மத்திற்கே தங்களுடைய வாழ் நாட்களை ஈடுபடுத்தி வரும் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் ஆலயப் பணிகளையும் வேதரக்ஷணத்தையும் மேற்கொண்டார்கள். தமிழ்நாட்டில் இப்போது இருக்கும் பெரிய க்ஷேத்திரங்களில், நகரத்தார்கள் திருப்பணி செய்து கும்பபேிஷேகம் செய்யாத கோவில்களே கிடையாது என்று சொன்னல் மிகையாகாது. இதே போல் வேதங்களைக் கற்று இன்று நடுவயதில் இருக்கும் எந்த சாஸ்திரிகள், கனபாடிகள் சிரௌதிகள் இவர்களைக் கேட்டாலும், அவர்கள் பன்ற இடம் நகரத்தார்களால் ஏற்படுத்தி நடத்தப்பட்டுவந்த, சில இடங்களில், இன்னும் நடத்தப்பட்டு வரும் பாடசாலைகளில் என்று நன்ருகத் தெரியவரும். இதேபோல் ஸ்தலங்





களில், அங்கு வரும் யாத்ரீகர்கள் தங்கவும், அவர்களுக்கு உணவு வசதிகள் அளிக்கவும் ஒவ்வொரு பெரிய க்ஷேத்திரங்களிலும் நகரத்தார்கள் சத்திரங்கள் ஏற்படுத்தி இன்னும் நடந்து வருகிறது என்பது யாவரும் அறிந்ததே.

அப்படி நகரத்தார்கள் நடத்திவரும் மகா பெரிய தர்மங்களில் பஞ்சபூத க்ஷேத்திரங்களில் ஒன்ருன திருவண்ணுமலையில், கோட்டையூரில் உள்ள ஒரு பெரிய குடும்பத்தார்கள், மெ. க. அன்னச் சத்திரம் என்று 100 ஆண்டுகளுக்கு முன் ஏற்படுத்தி அதில் யாத்திரீகர்களுக்கு அன்னதானம், பாடசாலை நடத்துவது, கார்த்திகைத் திருநாளை ஒகு பெரிய அளவில் செய்வது, அங்கு நடக்கும் வெள்ளி ரிஷபவாகன மண்டபப்படி, நாள்தோறும் அபிஷேக சாமான்கள் கொடுப்பது, திருப்பணிகன் செய்வது, ஏராளமான நகைகள் அண்ணுமலையாருக்கும் அம்பிகைக்கும் செய்துவைத்து, கிராமங்களும் வாங்கிக்கொடுத்து திருப்பணியும் செய்து கும்பாபிஷேகம் செய்வது, இதுபோல் 100 ஆண்டுகளாக ஒவ்வொரு நாளும் தெய்வ கைங்கரியத்துடன் எற்படுதி வருவது மிகவும் போற்றத்தக்க தர்மமாகும்.

நூறு ஆண்டுகள் இப்படி தடையின்றி நடத்தி வரும் தர்மம் என்றென்றைக்கும் நடந்துவரும்படியும், பெரிய தர்மங்களை ஏற்படுத்திய கோட்டையூரைச் சேர்ந்த குடும்பத்தினர்களும் அவர்களைச் சேர்ந்த நகரத்தார் மரபினர்களும் பல்லாண்டு பல்லாண்டாக சகல ஸௌபாக்கியத்துடனும் தர்ம சிந்தனையுடனும் மேலும்





மேலும் விருத்தியடைய, தர்மத்தை நன்ருக நடத்தி வரும்படி உதவ ஸ்ரீ அருணுசலேசுவரரையும் ஸ்ரீ உண்ணுமலை அம்பிகையையும் மணமாரப் பிரார்த்திக்கிறேன்.

இப்பேர்ப்பட்ட மாபெரும் தர்மத்தைச் செய்துவரும் குடும்பத்தார்களில் ஒருவரான ஸ்ரீ அ. க. அ. சித. அழ. சிதம்பரம் செட்டியார் அவர்கள், நான் பணியாற்றி வரும் ராஜா அவர்களின் குடும்பத்தின் மாப்பிள்ளை என்பதிலும், தவிர அவர்கள் என்னுடைய நெருங்கிய நண்பர் என்பதிலும் நான் ரொம்பப் பெருமையடைகிறேன்.

வி. வைத்திய சுப்பிரமணியம்



# திரு. ஏ. கே. செட்டியார் அவர்கள்

திருவண்ணுமலையில் நீண்ட காலமாகத் தொடர்ந்து மிகச் சிறப்பாக நடைபெற்றுவரும் பெரிய தர்மங்களில் ஒன்று அன்னசத்திரம்.

இந்த அறப்பணியை நூறு ஆண்டுகளுக்குமுன் தொடங்கி, பக்தியுடன் நடத்தி வருபவர்கள் கோட்டையூர் மெ. க. குடும்பத்தினர்.

ஏராளமான அன்னச் சத்திரங்களை வைப்பதைவிட ஓர் ஏழைக்கு எழுத்தறிவித்தல் புண்ணியம் என்ருர் பாரதியார்.

கல்வித் துறையிலும் மெ. க. குடும்பத்தினர் செய்த, செய்துவருகிற பணி மிகச் சிறந்தது.

அருணசலேசுவரர் ஆலயத் திருப்பணிகளுக்கும் கும்பாபிஷேகங்களுக்கும், நடைமுறைக் கட்டளைகளுக்கும் மெ. க. குடும்பத்தினர் அள்ளி வழங்கிய தொகை பல லட்சங்களாகும்.

பல ஆண்டுகள் திருவண்ணுமலையில் பள்ளி மாணவனுக இருந்த காலத்தில் அன்னச் சத்திரத்தின் பெருமையை நேரில் அறிவேன்.

அன்னச் சத்திரத்திலும், அதற்கு அருகிலும், தேஜோமயமான சேஷாத்திரி சுவாமிகள் அடிக்கடி தோன்றி, அருளிய பிரசாதங்களைப் பெற்று மகிழும் பாக்கியமும் கிடைக்கப்பெற்றேன்.

முன்னேர்கள் தொடங்கிய அறப்பணியை விடாது நடத்திவரும் மெ. க. குடும்பத்தினர் இன்னும் பல புதிய அறப்பணிகளையும் மேற்கொள்ள அண்ணுமலையார் அருள்புரிவாராக.

# பேராசிரியர் திரு. லெ. ப. கரு. இராமனுதன் செட்டியார் அவர்கள்

## சென்னை.

திருவண்ணுமலைத் திருத்தலத்தில், கோட்டையூர் மெ. க. குடும்பத்தினரால் நிறுவப்பெற்றுள்ள அன்னச்சத்திரத்திற்கு நூறு ஆண்டுகள் நிறைவு பெறுவது அறிந்து மிக்க மகிழ்ச்சி அடைகின்றேன். தமிழகத்திலும் பிற மாநிலங்களிலும், வெளி நாடுகளிலும் நகரத்தார் பெருமக்கள், பல கோடி ரூபாய்களை, வாரி வழங்கிச் செய்துள்ள தெய்வத் திருப்பணிகளின் அருமை பெருமைகளை, அனைவரும் நன்கு அறிவர். அத்தகைய பணிகளில் புழமையானவற்றுள், இத் திருப்பணி ஒன்றாகும்.

இச்சத்திரத்தின் வாயிலாகத் திருவண்ணுமலைப் பெருமானுக்கு ஆண்டுதோறும் மண்டபப்படிகள் நிகழ்த்துவதும், அடியார்களுக்கு உணவும், படிக்கும் பிள்ளைகளுக்கு உணவும், உடையும், உறையுளும் புத்தகமும் வழங்கிவருவதும், இச் சத்திரத்தைச் சேர்ந்தவர்கள், இறைவனுக்கும், இறைவிக்கும் பெரும் பொருட் செலவில், அணிகள், ஊர்திகள், விளக்குகள், குளம், குடமுழக்கு முதலிய திருப்பணிகளைத் தொடர்ந்து செய்துவருவதும் இறைவன் இன்புறும் அன்புப் பணிகளாம். இப்பணிகளை ஏற்றுக்கொள்ளும் இறைவன் திருவருளும், இப் பணிகளாற் பயன்பெறும் பலகோடி மக்களின் நல்வாழ்த்தும் மெ. க. குடும்பத்தினருக்கு என்றும் உரியனவாகும்.

அணி அண்ணுமலையாரின் பேரருளாலும், வழிவழியாக, மெ. க. குடும்பத்தினர் செய்யும் உதவிகளாலும் இச்சத்திரத்தின் பணிகள், நீடுழி, மேலும் மேலும் வளர்ந்து விரிந்து ஓங்குவனவாகுக.

லெ. ப. கரு. இராமனுதன் செட்டியார்

வாகீசகலாநிதி

# திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள்

## வாழ்த்துப்பாக்கள்

தேசு வடிவன் சிவபெருமான்
திகழும் அண்ணு மலைப்பதியில்
வீசும் புகழோ டன்னமிடும்
வியனர் மெ.க. சத்திரச்சீர்
ஆசை யுடனே சொல்லுவதற்
காரம் பித்து விரிவாகப்
பேசின் அதற்கோர் எல்லையுண்டோ?
பெருமை சொல்லச் சொலவிரியும். (1)

ஆய ஒருநூ ருண்டின்முன்
ஆங்கி ரசப்பேர் ஆண்டினிலே
மேய கார்த்தி கைத்திங்கள்
மெ க. அன்ன சத்திரத்தைத்
தூயர் முயன்று பத்தியினல்
தொடங்கி ஞர்கள்; மறைபயிலும்
சேயர் அங்கே அத்தியனம்
சிறக்கச் செய்து நலம்பெற்ருர். (2)

நாளும் அடியார் பலர்வந்து
நாவும் ஆரப் பசியாற
நீளும் சுவைசேர் விருந்தருந்தி
நிறைவு பெற்ருர்; மறைபயில

மூளும் விருப்பம் உடையவர்கள்
முன்போல் வாரா ததனுலே
கேள்போல் ஏழை மாணவர்க்குக்
கெழும உணவா தியஅளித்தார். 3

திருக்கார்த் திகைநா ளைச்சேர்ந்த
திருவி ழாவில் ஐந்தாம்நாள்
பெருக்கார் கருணைச் சிவபெருமான்
பிறங்கும் பவனி வருதற்கா
இருக்கா திதுபோல் பெரியதெங்கும்
எனவே சொல்லும் வெள்ளிவிடை
பொருப்பே போலச் செய்தமைத்துப்
பெரிய விழாவும் செய்கின்ருர். 4

இறைவன் ஆடும் படிநாளும்
இனிய பசுவின் பாலளித்தார்;
இறைவன் இறைவி இருவருக்கும்
இலங்கும் திருவா பரணங்கள்
முறையின் அமைந்த வாகனங்கள்
முயன்று செய்து வழங்கினுர்;
அறையும் சங்கத் தபிடேகம்
ஆற்றிப் பணியும் புரிந்தனரே. 5

பழைய அணியண் ணுமலையில்
பகவ ஞர்க்குத் திருப்பணிகள்
விழைவி னேடு செய்துகுட
நீரு மாட்டி வேண்டும்நிலம்
தழைய வாங்கி வழங்கியன்பு
ததும்ப நாளும் பூசையினை
இழைய ஞமல் வைப்பதுபோல்
இயற்றச் செய்து புகழ்பெற்ருர் 6

அண்ணல் அண்ணா மலையார்தம்
ஆல யத்தில் திருப்பணிகள்
வண்ண முறவே செய்துகும்ப
நீரும் ஆட்டி வளம்செய்தார்;
உண்ணெக் குருகி அடியார்கள்
உவந்து போற்றித் தரிசிக்க
நண்ணும் அறங்கள் பலபலவும்
நாளும் எண்ணிச் செய்கின்றார் 7

ஒவ்வோர் நாளும் சத்திரத்தில்
உவந்து வந்த அடியார்கள்
செவ்வே உணவுண்டு இன்புற்றார்;
செட்டி மார்தம் அறத்தினையே
ஒவ்வா தெந்தப் பேரறமும்
உண்மை என்றே புகழ்கின்றார்;
அவ்வா றந்தச் சத்திரத்தின்
அருமை பெருமை மிகஓங்கும் 8

அன்னதானம், கல்வி கற்போர்க்
கரிய உதவி, இறைவனுக்குச்
சொன்ன மேவு மாபரணம்
தூய வெள்ளி விடையூர்தி
இன்ன பலவும் செய்தியங்கும்
இந்த மெ. க. சத்திரமும்
நன்னர் நடத்தும் அன்பர்களும்
நாளும் ஓங்கி வாழியவே! 9

திருமுக கிருபானந்தவாரியார் அவர்கள்

## வாழ்த்துப்பா

### நேரிசை வெண்பா

வாழி திருவருணை!
வாழி நகரத்தார்!
வாழி வளமிகுந்து
மாண்புடனே; —வாழி
புகழன்ன சத்திரம்
பூவுலகில் ஓங்கித்
தகவுடனே வாழி
தழைத்து.

யோகி சுத்தானந்த பாரதியார் அவர்கள்

## வாழ்த்துப்பா

அணியண்ணா மாமலையில்
அன்னசத்தி ரத்தைத்
துணிவுறவே நூருண்டு
தூய - பணிபொலிய
நாட்டி நடத்துகின்ற
நல்லறச் செம்மல்களாம்
நாட்டார்கள் வாழியவே நன்று.







கோட்டையூர் மெ. க. மடம்.

உ
சிவமயம்
அண்ணாமலையார் துணை.

மெ. க. குடும்பத்தார் அவர்களுக்குரிய கோட்டையூரில் மெ. க. மடம் என்ற பெயரில், இந்த அன்னச் சத்திரம் தோன்றுவதற்கு முன்னமேயே ஒரு மடம் நிறுவி நடத்தி வருகிறார்கள்.

அம் மடத்தின் சார்பில் நந்தனவனம் ஒன்று உண்டாக்கப் பெற்றுக் கோவில்களுக்கு நாள்தோறும் பூமாலை கட்டிக் கொடுத்து, சிறப்பாக அப்பணி நடந்து வருகிறது.

மடத்தையொட்டி ஒரு பிள்ளையார் கோவிலும் திருக் குளமும் அமைக்கப் பெற்றிருக்கின்றன மடத்திற்குப் புதிய கட்டிடம் கட்டப்பெற்று, பல திருமணங்களுக்குப் பயன்பெற்று வருகிறது.







## முத்தப்ப செட்டியார் பாடல்

காடுவெட்டிப் போட்டுக்
கடிய நிலந்திருத்தி
வீடுகட்டிக் கொண்டிருக்கும்
வேள்வணிகர் — வீடுகட்கு
அன்றைக்கு வந்தளங்கள்
அம்மா! இலக்குமிநீ
என்றைக்கும் நீங்காது இரு, க

நீங்காது நின்மகனும்
நெடியதிரு மாநிதியும்
பாங்காக அன்றுவந்த
பாற்கடல்போல் — தேங்காது,
நன்ருக நீஇருந்து
நாளும், வளம்பெருக்கி
என்றைக்கும் நீங்காது இரு. உ

கோட்டையூர் மாவணிகர்
கொண்டுவிற்றுக் கொண்டுவரும்
ஏட்டையே யாங்கண்டு
இயம்பினேம் — கோட்டையூர்
நாட்டைவிட்டுச் சென்ற
நகரத்தார் யாவரும்பொன்
கோட்டை யுடன்வருவார் கொண்டு. ௩

நீர்பெருகி ஊற்றெடுக்கும்
நீண்ட புகழ்க்கோட்டை
ஊர்பெருகி ஊற்றெடுக்கும்
ஊருணிகள் — சீர்பெருகி
அன்ன ஊர்அன்ன
அருஞ்செல்வம் ஊற்றெடுக்கும்
பின்னும்ஓர் ஊழிபீ றிட்டு. ௪



